உடன்பட்டார் மதுரகவியார். நம்மாழ்வாரின் 1102 திருவாய் மொழிப் பாசுரங்களில் ஒன்றான "கண்ணன் கழலினை .....நண்ணும் மணமுடையீர் எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே.'' எனத் தொடங்கும் ஒரு பாசுரத்தை ஒரு முறியில் எழுதி சங்கப்பலகையில் வைத்தார். சங்கப்பலகை உயர்ந்தது. மற்ற சுவடிகளைத் தள்ளியது. நம்மாழ்வார் பெருமையை உணர்ந்த சங்கப்புலவர்கள் மன்னிப்புக் கேட்டனர். சங்கப் பலகையில் தங்கிய திவ்யபிரபந்தம் தமிழ்வேதம். எனவே வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன் நம்பி என நம்மாழ்வார் வணங்கப்படுகின்றார்.

# பக்திசாரர்

## – திருமழிசை



இப்பூவுலகில் பார்கவ மஹரிஷியின் மகனாக தைத்திங்கள் மகம் நட்சத்திரத்தில் அவதரித்த சக்கரத்தாழ்வாரின் அம்சமான பக்திசாரர் என்கின்ற திருமழிசை பிரானை நான் வணங்கிக் கொள்கின்றேன்.

கடந்த துவாபரயுகத்தில் கடபயாதி ஸங்யையின் கணக்கின்வகையில் எட்டு லட்சத்து அறுபத்து இரண்டாயிரத்து தொள்ளாயிரம் வருடங்கள் கழிந்து ஸித்தார்த்தி வருடத்தில் சூரியன் மகரராசியில் பிரவேசித்த மாதத்தில் (தை) இருபத்தி ஏழாம் தேதிக்கு மறுநாள் மகம் நட்சத்திரத்தில்; அன்று ஞாயிற்றுக் கிழமை பௌர்ணமிக்கு மறுதினம் சென்னைக்கும் காஞ்சிபுரத்திற்கும் இடையில் உள்ள திருமழிசை ஊரில் பார்கவ மகரிஷியின் புத்திரனாக அவதரித்த ஸுதர்சனரை மீண்டும் மீண்டும் வணங்கிக் கொள்வோம். அவரது அவதார மஹிமையும் வாழ்வின் நிகழ்வுகளும் நமக்கு பகவானின் அருள் பற்றி வாழ்வில் முழுமையை அடையும்படி பக்தியின் பரிசாகப் படித்து நினைவு கூர்வோம்.

இவ்வாறாக குருபரம்பரை நூல்களில் வழங்கியிருக்கும் குறிப்பிலிருந்து நான் தெரிவிக்கின்றேன்.

சக்கரத்தின் அம்சம், பார்கவ மகரிஷியின் திருக்குமாரர், ஊர் திருமழிசை. காலம் துவாபரயுகம் 862900 வருடங்களுக்குப்பின் ஸித்தார்த்தி வருடம். தை மாதம். 28ம் தேதி ஞாயிற்றுக்கிழமை, பிரதமை திதி, மகம் நட்சத்திரம். இவரது அவதாரம் பற்றிய அதிகாரபூர்வமான குறிப்பின்படி சமர்ப்பிக்கின்றேன். பக்தர்கள் தங்கள் பிறப்பின் இரகசியங்களை மனப்பூர்வமாக நினைத்து திருமழிசைபிரான் வைபவம் அறிந்து பிரார்த்திப்பது இப்பிறவியில் உசிதமானது. உத்தமகாரியம் என்பது சத்தியம். பக்திஸாரர் திருவடிகளே சரண் நமக்கு.

காலம் யாரையும் கைவிடுவதில்லை. காலம் காட்டும் கருணையைப் போல் வேறு எந்த தெய்வங்களுக்கும் கூட திராணியில்லை.

கீதையில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர், "பரமமான காலம் நான்" என்று கூறுகின்றார்.

நமது வாழ்நாட்களினால் தொகுக்கப்பட்ட காலங்களில் கடந்த, நிகழ்ந்த காலங்களின் உணர்விருந்தால் உற்றுப்பார்ப்போம். அதன்படி மகிழ்ந்தது, விழுந்தது, எழுந்தது எவையெல்லாம் அனுபவித்து வாழ்ந்து கடக்கச் செய்த காலம் நம்மிடம் கருணையுடன் அரவணைத்துக் கொண்டிருக்கின்றதை அறிய நாம் அருகதை உள்ளவர்களானால்; அது நம் பெற்றோர் தந்த வரம்!

எனக்கு வேடிக்கை பார்க்கக் கூடத் தெரியாத வயதில் என் அம்மா என்னைத் தூக்கிக் கொண்டு கோவில்களுக்குச் சென்று கல்லில் கடவுள்களையும் கலைகளையும் காட்டித் தராமலிருந்திருந்தால் இன்று நான் அவர்களை இழந்தும் கூட இப்படி வாழத் தெரியாமல் விதி வசத்தில் என்னவாகியிருப்பேனோ?! இன்று விதியை நான் எப்படி வேண்டுமானாலும் எழுதிக் கொள்கின்றேன்.! உங்களாலும் முடியும்! எல்லாம் காலம் காட்டும் கருணை.

அது ஒரு புரட்டாசி மாத காலம். வெயிலும் மழையுமாய் சனிகளால் மக்கள் கலைந்து களைந்து உழலும் காலம். எனக்கும் எம்பெருமானுக்கும் வசந்தகாலம்(ஐந்து சனி வாரங்களால்). பகவானுக்கு உற்சவமென்றால் பக்தனுக்கு உற்சாகம்!

மகிழ்ச்சியடைவதில் ஒருவருக்கொருவர் சளைத்தவர்களில்லை.

பக்தர்; ''பகவானது திருவுருவம் திவ்யாபரணங்களுடனும், தேவிமார்களுடனும் பரிமள சுகந்தமாய் காட்சியளிப்பதும்,அதைக் கண்டு ஆனந்தமடைந்து பேரின்பப் பெருக்கில் தான் திளைத்தாலும் யாராவது 'கண்' வைத்துவிடுவார்களோ என்று எச்சரிக்கையாய் எதற்கும் பகவானுக்கு ஒரு நல்லாசிகளை அவனிடமே கேட்டுப்பெற்று அவனுக்கு கவசமாக்கிக் காண்போம். அப்பொழுதுதான் நாமே கண் வைத்தாலும் கூட அவனுக்கு ஒரு குறைவும் வராது" என்கின்ற எண்ணத்தில் பக்தர் திளைக்கின்றார். சிந்தை, வாக்கு, செயல், உடல் முழுவதும் பகவானது வைபவங்களிலேயே குறைவிலாத இன்பநிலையில் உழல்கின்றார். இந்த உலகியல் செல்வம், உறவு, மதிப்பு, பதவி, வறுமை, அவப்பெயர், பந்தபாசம் எல்லாம் அவர் கவனத்தில் உறைப்பதேயில்லை.

பகவான்; தனது செல்வாக்கினால் பக்தனின் வறுமையை போக்கி, பெருமையை வளர்த்து, உறவுகளைப் பணியச் செய்து கொண்டாடலாம்! அதையெல்லாம் அவர் செய்வதில்லை. தனது நிலையைக் காட்டிக் கொள்ளாமல் தன் பக்தன் விரும்பியபடி அழகழகாய் ஸர்வசுதந்திரனாய், ஸ்யாம சுந்தரனாய் தன் லீலைகளில் தான் மகிழ்வுடன் இருப்பது போலவே காட்டிக் கொண்டு தனியே தன் ஏழை பக்தனுக்கு பரிதாபமானவனாக பணியாளனாகக் கிடந்து ஒரு கவள உணவில் ஒரு பங்கு தரமாட்டாயா என்று ஏங்கி நிற்கின்றான். இவ்வாறாக இவர்களின் மகிழ்வை யாரால் உணர முடியும்! கண்கொண்டு பார்க்க முடியுமா? கண்ணீரில் கரைவதில்தான் அவர்கள் உறவினை அதன் அளவினை அறிந்து விடத்தான் முடியுமா? வாழ்வது சுலபம், வாழ்வும் சுலபம்தான். ஆனால் யாரையும் வாழவைப்பது? இந்தக் கலியில் தன் பெற்றோரையும், பிள்ளைகளையும், மனைவி, நண்பர்கள், உற்றார் அனைவரையும் யாரும் யாரையும் வாழ வைக்க முடியவில்லை. ஏன்? "தியாகம்" இல்லை.

"நான்" என்கின்றதை தியாகம் செய்ய முடியாது. அது போக வேண்டியதும் அவ்வளவு முக்கியமில்லை.

எதற்காக கடவுளைத் தேடுகின்றோம்.!
எதற்காக கடவுளை மறுக்கின்றோம்!

இதில் தேடுகின்றவனுக்கு உபாயம் என்ன வேண்டும்? "தியாகம்".

மறுப்பவனுக்கு உதவி செய்வது அவனது "பொறாமை" குணம்.

'பக்தனாக' எதைத் தியாகம் செய்ய வேண்டும்? "என்னிடம் உரிமை பாராட்டுகின்ற உறவுகள், செல்வங்கள், பதிவிரதை, வேலையாட்கள், ஆட்சியதிகாரம் இவைகள் எல்லாம் எனக்கு இறைவன் தந்தது. அவைகளில் எனக்கு எந்த உரிமையும் இல்லை. என் கடமையை நான் ஆண்டவன் அருளால் ஆற்றுகின்றேன் என்பதால் நான் தியாகம் செய்ய என்னிடம் என்ன உள்ளது". பகவான் இவரை பக்தனாக்க என்றுமே முயற்சிப்பது இல்லை.

எண்ணற்ற வைகுண்ட உலகங்களையும், சொர்க்க போக உலகங்களையும் பராமரிக்கின்ற பகவானுக்கு இவரைப் போன்ற இன்ப நிர்வாகிகளை பத்திரமாக அங்கே வாழ வைப்பதில் என்ன மெனக்கிட வேண்டியதாயிருக்கின்றது. அதைப் போலவே பொறாமையில் தன்னை வெந்து நொந்து போக வைத்துக் கொள்ளும்

முழுமுட்டாளிடம் அவருக்கென்ன கோபம் வர வேண்டியதாயிருக்கின்றது. தானே புழு பூச்சிகளுக்கு இரையாக்கிக் கொள்பவனை நினைத்துப் பார்க்கக் கூட தேவையில்லை.

ஈஸ்வரஸ் யாப்ய அபிமாந த்வேஷித்வா அதைந வாச்ஸ
– ஸ்ரீ நாரத பக்தி ஸூத்ரம்

பகவானுக்கு செருக்கின்பால் வெறுப்பும், எளிமையின்பால் அன்பும் இருக்கின்றபடியால் கர்மயோகம் – ஞானயோகம் இவைகளை விட பக்தியே சிறந்தது.

'ஸா து கர்மக்ஞாந யோகேப் யோ ப்யதிதரா'

பிரேமையாகிற பக்தி கர்ம–ஞான யோகத்தை விட உயர்வானது. ஏனென்றால் பக்தியின் பயன் பக்தியே!
– ஸ்ரீ நாரத பக்தி ஸூத்ரம்.

பக்தி ஸாரராக பகவான் தனது ஸுதர்ஸன அம்ஸத்தில் அவதரிக்கச் செய்தார். உடல் உறுப்புகள் அவைகளின் புலன்கள் இல்லாமல் தோன்றியதால் பெற்றவளே (கனகாங்கி) வீசியெறிந்து விட்டாள். திருமழிசை ஜகந்நாதப் பெருமாளும், பிராட்டியும் எடுத்து பேணி வளர்க்கத் தகுந்த வடிவம் வழங்கினர்;



மூங்கில் காட்டில் பிரம்பறுத்துப் பிழைக்கும் பிள்ளை இல்லாத ஏழைத் தம்பதிக்கு பிள்ளையாகக் கிடைக்கச் செய்தார் எம்பெருமான்.

ஏழுவயது வரை பிரம்பறுப்பானிடம் வளர்ந்த பிள்ளை தனது அஷ்டாங்க யோகத்தினால் முழுமுதற் கடவுளிடம் சேர வேண்டியதே வாழ்வு என்பதில் உறுதியாக இருந்தான். பல்வேறு ஸ்தலங்களுக்குச் சென்றான்.

வேதங்களை ஏற்காத பற்பல சமயங்கள், வேதத்தை ஒப்புக் கொண்டாலும் தவறாக அவப்பொருள் கூறும் சமயங்கள் ஆகிய ஒவ்வொரு மதங்களிலும் அந்தந்த மதங்களின் ஒழுக்க விதிகளைப் பின்பற்றி அவற்றில் உண்மையுடன் இருந்து அச்சமயங்கள் இறைவனிடம் தம்மைக் கொண்டு சேர்க்காது என்பதையறிந்தார். அவைகளிடமிருந்து விலகினார். இறுதியில் சைவ சமயத்தைக் கடைப்பிடித்தார். திருமயிலை வந்தார். அங்கு ஸ்ரீ வைஷ்ணவர் பேயாழ்வார் அன்பினால் இராமாயணம், மஹாபாரதம், மநு முதலான ஸ்மிருதிகள், ஸாத்வீக புராணங்கள், இன்னும் உபநிஷத்துக்கள் அனைத்தும் கற்றுத் தெளிந்தார். தன்னகத்தே விளங்கும் பரம்பொருளைக் கண்டார். பேயாழ்வாரிடமே தன்னை ஏற்று வழிநடத்தக் கேட்டார்.

பேயாழ்வார், அவருக்கு பஞ்ச ஸம்ஸ்காரங்களோடு மந்த்ரார்த்தங்களையும் உபதேசித்தார். அது முதல் பரம வைஷ்ணவரானவர் திருமழிசை வந்து திருமழிசையாழ்வார் ஆனார்.

"சாங்கியங்கற்றோம் சமணம் கற்றோம்
சங்கரனார் ஆக்கிய ஆகம நூல் ஆராய்ந்தோம்
பாக்கியத்தால் செங்கட் கரியானைச் சேர்ந்தோம்
யாம் தீதிலமே எங்கட்கரிய தொன்றில்"
என்று அநுசந்தித்தார்.

திருமகள் அருளால் யோக நிலையில் ஆழ்ந்தார் ஸ்ரீ மந்நாராயணரைத் தியானித்து இருந்தார்.

ஒருநாள் ரிஷப வாகனத்தில் பார்வதி பரமேஸ்வரராய் வானவீதியில் சென்று கொண்டிருக்கின்ற பொழுதில்; பார்வதி தேவி திருமழிசையின் மேல் தோன்றும் தேஜஸ்ஸைக் கண்டு தன் பதியிடம்,

'இது என்ன விந்தை! இவர் யார்? ' என்று கேட்கின்றாள்.

சிவபெருமான்,'' இவர் ஒரு சிறந்த மஹானுபாவர். நமது அடியவராக இருந்து இப்பொழுது ஸ்ரீமந்நாராயணரிடம் பக்தி செய்கின்றார்" என்று பதிலுரைத்தார்.

பரமேஸ்வரிக்கு பாசம்! ''உடனே வாருங்கள் வரமருள்வோம்" என்றாள்.
சிவ பெருமான் தயங்கினார்.

அம்பிகையிடம், 'அவசரம் வேண்டாம் சகியே! அவர் ஹரி பக்தர். ஸ்ரீ வைஷ்ணவர். எவை குறித்தும் அவர் தவமியற்றவில்லை. வேண்டிக் கொள்ளவும் இல்லை. அவருக்கு நீயும் நானும் தரக்கூடியது ஏதும் இருப்பதாக தோன்றவில்லை."

உற்று நோக்கினாள் அன்னை. நிதானமாக, "நீங்களே வைஷ்ணவரென்றும் வேதம் கூறுகின்றதே!"

"வைஷ்ணவானாம் யதா சம்பு"
மறுவார்த்தையின்றி சக்தியின் விருப்பத்தின் பேரில் சிவனும் இரங்கினார்; இறங்கினார்.

திருமழிசைபிரான் அம்மையப்பனைக் கண்டதும் வணங்கினார். வாழ்த்தினார்.

வியந்தார் உமையொருபாகர். அம்மையோ நகைத்தாள்.

"தாங்கள் என்ன வேண்டுமானாலும் பெற்றுக் கொள்ள உங்கள் அன்பின் ஆசியை நாங்கள் ஏற்கின்றோம்" என்றாள்.

''பிறப்பறுக்கும் பிஞ்ஞுகனே போற்றி! என் வேண்டுதல் ஒன்றே! பரமபதம் அருள வல்லீராகில் அருள்வீர்'' என்று ஆழ்வார் விண்ணப்பிக்க,

"மோட்சத்தைத் தர வல்லவன் முகுந்தனே! யாம் வழங்கும் ஹரி பக்தி உம்மிடமே உள்ளது. வேறென்ன வேண்டுமாயினும் கேளும்"

''ஐயனே! ஸந்த்ரசேகரா உம் வரவு வீணேயென்று ஆவதில்லையெனில் இதோ என் தவத்திற்கு நீண்ட ஆயுளையேனும் வழங்கு வீராக!"

''அது கர்மானுகுணமாக ஏற்கனவே வரம்பு கட்டப்பட்டுவிட்டது. அதை வளரச் செய்ய என்னாலாகாது"

"தேவரீர் நான் துணிதைக்கும் ஊசியின் பின்னே நூல் வரச் செய்யும்".

சினந்தார் சிவன். அனங்கனை எரித்த கண்ணைத் திறந்தார். கண்ணிமைப் பொழுதில் வந்த கனல் காணாமல் போனது. திருமழிசை பிரான் வலத்திருவடி பெருவிரலில் உள்ள கண்ணின் அக்னியில் அடங்கியது அறிந்தார். அம்மையப்பன் அடியார் பெருமையல்லால் வேறென்ன அறியும் உலகென்றார். "பக்தி ஸாரர்" என்று கொண்டாடினார். 'திருமழிசை ஆழ்வார்' என்றே வைஷ்ணவ வையகம் போற்றுகின்றது.

திருமழிசைபிரானின் வைபவம் அறிந்த ஒரு வேளாளத் தம்பதியினர் தினசரி பாலமுது சமர்ப்பித்து வணங்கி மகப்பேறு வேண்டி நின்றனர். ஒருநாள் திருமழிசைபிரான் தான் அருந்திய பின் மீதமாகிய பாலை அவர்களுக்கு வழங்கினார். அந்தப் பிரசாதத்தின் பலனாய் அவர்களுக்கு ஒரு மகன் தோன்றினான். அவனே கணிகண்ணன். பிற்காலத்தில் உற்ற சீடராக பக்திஸாரரிடம் தொண்டாற்றினார்.

நான்முகனை நாராயணன்படைத்தான் நான்முகனும்
தான் முகமாய்ச் சங்கரனைத்தான்படைத்தான் யான்முகமாய்
அந்தாதி மேலிட்டு அறிவித்தேன் ஆழ்பொருளை
சிந்தாமல் கொள்மின் நீர் தேர்ந்து

நான்முகன் திருவந்தாதி – 1.

ஸ்ரீமந்நாராயணர் பிரம்மனைத் தனது நாபிக்கமலத்தில் தோற்றுவித்து ஆக்கும் தொழிலுக்கு ஆணையிட்டார். ஆக்கத்தில் அவலம் வந்தால் அழிக்க வேண்டுமேயென்று தன் மனோபாவத்தின்வழியே மங்கள ருத்ரனைப் படைக்கின்றார் பிரம்மன். ஆதி வேதங்களின் ஆழ்பொருளைக் கண்டு வணங்கி என் உள்ளமெலாம் நிறைந்த பரம்பொருளை அறிவிக்கின்றேன்! யாரால் யாருக்குப் பிறந்தோம், பிறப்போம் என்று சிந்திக்கக்கூடத் தெரியாத மக்களே நீங்களே தேர்ந்து கொள்ளுங்கள்.

இந்திரனால் ஏவப்பட்ட தேவலோக மங்கை கனகாங்கி பார்கவ ரிஷியின் தவத்தைக் கலைத்து தன் கடமையாய்ப் பெற்ற பிரானை திருமழிசை மூங்கில் பிரம்பறுப்பானின் பிள்ளையாய் தந்தாள் தத்தாக!

உடற்பிண்டமாய் உலகிற்கு வந்த பிரானைப் பிரியமாய் வளர்த்தவர் திருமழிசை ஜகந்நாதப்பெருமாளும், பிராட்டியாரும். இவ்வாறு வந்தவர் வேறு யாரை பெற்றோராகப் பற்றுவார் பிரான். நான்முகன் திருவந்தாதி தொண்ணூற்றியாறு பாசுரங்களிலும் அறுதியிட்டும் கூறுகின்றார் ஆதி கேசவனையே!

மற்றுத்தொழுவார் ஒருவரையும் யானின்மை*

கற்றைச் சடையான்கரிக்கண்டாய் *எற்றைக்கும்

கண்டு கொள் கண்டாய் கடல்வண்ணா *யானுன்னைக்

கண்டுகொள்கிற்குமாறு. – நான்முகன் திருவந்தாதி – 26.

நாமே நல்லறிவுடன் நாராயணனைப் பற்றிக்கொண்டு பக்தி செய்வதில்லை. எப்பொழுதும் எனது புத்தி உன்னில் நிலைக்குமாறு நீயேதான் என்னைக் கண்டுகொள். வேறு யாரும் வந்து என் அன்பைப் பங்குபோட வரவேண்டாம் கற்றைச் சடையானும் கூட!

ஆனாலும் இப்படியொரு ஆனந்த அதிசயமான காலத்தை வைத்திருக்கும் பொற்கழலினைக் கொண்ட எம்மன்னனை கண்ணனை நாளெல்லாம் தொழுவதே என் தொழிலாகக் காதல் கொண்ட எனக்கு வேறு யாருடனும் இணங்க இயலாததால் பிஞ்ஞகனே எனக்குப் பிறராகிவிட்டானே! அவனுக்கு நேர் நானாவேனா

பிதிரும்மனமில்லேன் பிஞ்ஞகன் தன்னோடு*

எதிர்வன் அவனெனக்கு நேரான் *அதிரும்

கழற்கால மன்னனையே கண்ணனையே *நாளும்

தொழக்காதல் பூண்டேன் தொழில்.
– நான்முகன் திருவந்தாதி – 84.

பரமேஸ்வரனே தனது தேவியுடன் வந்து சோதித்தறிந்து தேர்வு வெற்றிக்கு "பக்திஸாரர்" எனப் போற்றிச் சென்ற பின்னும் ஒருநாள்; சித்தபுருஷன் 'ஸக்திஹாரன்' என்றொருவன் தனது அஷ்டமா சித்தியாலே புலி வாகனத்தில் வானவீதியில் வலம் வருகின்றான். திருமழிசையைக் கடக்கும் வான்வெளியில் வாகனம் நின்றுவிட்டது. புவியின் சுழற்சியில் திருமழிசைக்கு மேல்நேர் நின்றுவிட்டது. பேராச்சர்யம் அடைந்த ஸக்திஹாரன் யோக நிஷ்டையில் ஆழ்ந்திருக்கும் பிரானைப் பார்க்கின்றான். அன்புப்பெருக்கில் ஐயோ பாவம் கந்தல் வேட்டியைக் கையால்தைத்து உடுத்தியமர்ந்திருக்கின்றார் என்று எண்ணினான். எழுப்பினான், "முநீந்திரரே! நீர் உடுத்தியிருக்கும் கந்தையைக் களைந்துவிட்டு இந்தப் பட்டு பீதாம்பரத்தை உடுத்திக் கொள்ளும்" என்று கூறி தன் சித்துவேலையில் பித்தேறிப் போய் நீட்டினான். கண்ணெடுத்தும் பாராத பக்திஸாரர்: அந்த சித்தனுக்கு அவன் அங்கத்திற்குப் பொருத்தமான தங்கக்கவசம் ஒன்றை மாணிக்க, வைர, முத்துக்களில் அலங்கரிக்கப்பட்டதோடே வழங்கினார். கண்டதும் கலங்கினான் சூரியனைப்போல் ஒளிரும் கவசம் கண்டு கலங்கினாலும்; தன் பொருட்டு இம்மஹானுக்கு ஏதாகிலும் வழங்க வேண்டும் என்று தன் கழுத்தில் இருந்ததொரு மாணிக்க மாலையை வழங்கினான்.

திருமழிசைபிரானும் தன்பங்கிற்கு தனது கழுத்தில் அணிந்திருந்த துளசி மாலைகளைக் கழற்றி தனது சங்கல்பத்தில் அவை மிகச்சிறந்த நவரத்னமணி மாலைகளாக மாற்றிக் காட்டினார். அவைகளைக் கண்டு வெட்கினான் சித்தன். இவர் ஸித்தர்களின் தலைவரே என்றெண்ணிக் கொண்டே சென்றான்.

"மேலும் ஒரு ரஸவாதி இரும்பைப் பொன்னாக மாற்றும் ரஸகுளிகை ஒன்றை ஆழ்வாருக்குப் பரிசளிக்க அவரோ தனது திருமேனியில் கைவைத்துத் தேய்த்து உடற்தூசியைத் தந்து, இது பலகோடி கற்களையும் தங்கமாக்கவல்லது இதைக் கொண்டு நீ பிழைத்துக் கொள்" என்றார். மிரண்டு போன ஸித்தன் தண்டனிட்டு வணங்கினான்.

அவ்வப்போது இவ்வாறாக வந்த இடையூறுகளால் ஒருவரும் வராத மலைக்குகையை அடைந்து சௌகரியமாக உட்கார்ந்தார்.

திவ்ய தேச யாத்திரையில் சுற்றி வந்த முதலாழ்வார்கள் மூவரும் (பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்) திருமழிசைபிரானைக் கண்டு மகிழ்ந்து சிலநாட்கள் சேர்ந்து வசித்தனர்.

ஒருவருக்கொருவர் பகவானின் வைபவங்களை நினைவுகூர்ந்தும், துதித்தும், பாடியும், ஆடியும் கொண்டாடினர். அவர்கள் சென்ற பின்பு திருமண் வேண்டியதாயிருக்க எம்பெருமான் கனவில் காஞ்சிக்கு வரச் செய்தார். திருமழிசைப் பதியிலிருந்து காஞ்சி வந்தார்.

ஆழ்வாரின் தொண்டுக்கே தோன்றிய கணிகண்ணன் மிக்க மகிழ்வுடன் தனது ஆச்சாரியனுக்குத் தொழுது பணி செய்தான். அந்நாளில் காஞ்சி மாநகரில் முதிர்ந்த வயோதிக மாது ஒருத்தி திருமழிசை ஆழ்வார் உள்ள இடத்தில் திருவலகிடுதல், மெழுகுதல், கோலமிடுதல் முதலான கைங்கர்யங்களை தினந்தோறும் செய்து கொண்டிருந்தாள். ஒருநாள் ஆழ்வார் திருக்கண்விழித்த காலத்தில் அவரைச் சரணடைந்தாள். தண்டனிட்டு வணங்கினாள். அவளது மனத்தூய்மை கண்டார் ஆழ்வார். இதுநாள்வரையிலும் தனது அஷ்டமா ஸித்தியாற்றல்கள் எல்லாம் கைவரப் பெற்ற எதையும் எதற்கும் யாருக்கும் பயன் படுத்தவுமில்லை; அவ்வாற்றல்களை மதிக்கவுமில்லை.

தனது அன்பு சீடன் கணிகண்ணன் உஞ்சவிருத்தியெடுத்து வருவான். சமர்ப்பிப்பான் அவனைச் சாப்பிடச்செய்து தானும் அருந்துவார். இருவரும் திருவெஃகாவில் அரவணை மேல் பள்ளி கொண்ட பெருமாளுக்குத் தொண்டாற்றி வாழ்ந்து வந்தனர். இன்று பகவத் ஸங்கல்பத்தால் அம்முதிய மாது அவர் பார்வையில் பட்டாள். உடல் தளர்ந்த இயலாமையிலும் அவளது பக்தித் தொண்டுக்கு மனம் தளராதிருக்கக் கண்டு இரங்கினார். அருள்புரிய வேண்டி கண்களில் கண்ணீர் வழிய அவர்முன் நின்றாள். அருள்தந்தார். ஆராவமுதனின் ஆசியால் அம்மாது தேவ மங்கைபோல் இளமை, வலிமை, அழகும் பெற்ற நற்குணவதியானாள். மேலும் இம்மண்ணுலகில் மாறாத இளமையிது எனும் வரமும் பெற்றாள்.

கடைத்தெருவில் காஞ்சி மன்னன் கண்டான். கல்யாணம் செய்து கொண்டான். பட்டத்து மகரிஷியானாள் அம்மாது. அவளது மாறாத இளமை கண்டான் மன்னன். தனது முதுமை வளர இவள் மட்டும் எவ்வாறு அப்படியே இருக்கின்றாள் என்று அறிய அவளிடமே கேட்டான்.

“வேறொன்றும் இரகசியம் இல்லை. என் நிலை கண்டு இரங்கிய எம் “ஆச்சார்யர் வழங்கிய வரம்” என்றாள்.

“நானும் அந்த ஆழ்வார் அவர்களின் அருளுக்குப் பாத்திரமாக வழியென்ன” என்றான் மன்னன்.

“நம் அரண்மனைக்கு தினந்தோறும் உஞ்சவிருத்திக்கு வருகின்ற கணிகண்ணர் தான் அந்த யோகிக்கு அந்தரங்க சிஷ்யராவார். அவரை வணங்கி விண்ணப்பித்தால் உங்கள் விருப்பம் நிறைவேறலாம்”

மறுநாள் வாசலுக்கு வந்த கணிகண்ணனை மன்னன் உபசரித்து, “தங்களின் ஆழ்வாரை நான் சேவிக்க இங்கு எழுந்தருளப் பண்ண வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான்.

“அவர் எம்பெருமானை விட்டு எங்கும் எழுந்தருளார்'' என்று கூறிவிட; மேலும் கணிகண்ணரிடம் அரசன், ‘‘என்னையாவது அவரிடம் அழைத்துச் சென்று அவருடைய கருணைக்கு இலக்காக்கி அவரது அருளால் என்னை மாறாத இளமைப்பேறு உடையவனாக ஆக்க வேணும்”

மன்னா, உன்னைப் போல் இம்மைப் பயனையே வேண்டி நிற்பாரை ஆழ்வார் கண்ணெடுத்தும் காணமாட்டார் என்றார் கணிகண்ணர். அரசன் மிகவும் சோர்ந்தான். வழியறியாது வருந்தினான். அமைச்சர்கள் வந்து தேற்றினார்கள்.

“தெய்வப் புலமை வாய்ந்த இக்கணி கண்ணன் பாடினாலே பல அற்புதங்கள் நிகழ்கின்றன. இவரால் பாடப் பெற்றாலும் நீங்கள் விரும்பியது கைகூடும்” என்றார்கள்.

மறுநாள் மன்னன் வாசலில் காத்திருந்தான். உஞ்ச விருத்திக்கு வந்தார் கணிகண்ணன். அரசன் சேவித்தான். மீண்டும் சோதித்தான். "கணிகண்ணரே! நீங்களேனும் எனக்கு மாறாத இளமை வரும்படி கவிபாட வேணும்'' என்று கேட்க; அவரோ, ''நான் நாராயணனையல்லாது நா கொண்டு மானிடம் பாடேன் என்றுரைத்தார்".

அரசன் விடுவதாயில்லை. எவ்வாறாயினும் என்னைப் பாடத்தான் வேணும் என்று நிர்பந்தித்தான்.

கணிகண்ணரும் ''ஆடவர்கள் எங்ஙனகல் வாரருள் சுரந்து, பாடகமு மூரகமும் பாம்பணையும் நீடியாமல், நின்றானிருந்தான் கிடந்தான் இதுவன்றோ மன்றார் பொழிற்கச்சி மாண்பு" என்று கச்சிநகரைக் கவிபாடினார்.

"நான் என்னைப் பாடு என்றால் நீ என் நகரைப் பாடுகின்றாயே! நீ என் ராஜ்யத்திலிருக்கக் கூடாது போ வெளியே! என்று வெகுண்டான் மன்னன். உடனே கணிகண்ணனும் திருமழிசை ஆழ்வாரை யடைந்து நடந்த நிகழ்வை விண்ணப்பித்து, ''அடியேனுக்கு விடை தந்தருள வேணும்'' என்றார்.

ஆழ்வார் அவர்கள், ''நானும் பெருமாளை எழுந்தருளப்பண்ணிக் கொண்டு கூட வருகின்றேன்'' என்று கூறி திருக்கோயிலுக்குள் சென்று அடியவர்க் கெளியவனான எம்பெருமான் திருவடி தொழுது,

கணிகண்ணன் போகின்றான் காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டா – துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றான் நீயும் உன்தன்
பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்.

என வேண்டிக் கொண்டார். பகவானும் உடன்பட்டார். மூவரும் காஞ்சி நகரைவிட்டு வெளியேறினார்கள்.

அந்நாளிரவு ஊருக்கு வெளியே ஓரிடத்தில் தங்கினார்கள்.

காஞ்சி மாநகர் காரிருளில் மூழ்கியது. அந்நகரில் வீற்றிருந்த தெய்வங்கள் எல்லாரும்; எம்பெருமானும், ஆழ்வாரும், அவரடியாரும் போகும் போதே சேர்ந்து வெளியேறிவிட்டனர்.

எதிர்பாராத இந்நிகழ்வுகண்டு மன்னனும் கதி கலங்கினான். மந்திரி பிரதானிகளுடன் அவனும் நகரைவிட்டு வெளியேறி கணிகண்ணனும் அவருக்காக ஆழ்வாரும் அவருக்காக பகவானும் வந்து தங்கியிருக்கும் இடம்தேடி வந்தான். விழுந்து வணங்கினான். தன்னை மன்னிக்க வேண்டினான். மீண்டும் தங்கள் நகருக்குள் வர பிரார்த்தித்தான்.

கணிகண்ணன் ஆழ்வாரைப் பிரார்த்தித்தார். ஆழ்வார் பகவானிடம்,

"கணிகண்ணன் போக் கொழிந்தான் காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீ கி டக்க வேண்டும் – துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கொழிந்தான் நீயும் உன்தன்
பைந்நாகப் பாய் படுத்துக் கொள்"

என அரவத்துணையனைப் பிரார்த்திக்க எம்பெருமான் ஆழ்வார் சொன்னவண்ணம் மீண்டும் திருவெஃகாவை வந்தடைந்தனர்.

ஓரிரவு அவர்கள் தங்கிய ஊர் ஓரிருக்கை என்று இன்றும் அழைக்கப்படுகின்றது.

பெருமானும் முன்புபோல் வலத் திருக்கையைக் கீழ்வைத்துக் கொண்டு படுக்காமல் எக்காலத்திலும் எவரும் அறியும்படி இடத்திருக்கை கீழ்வைத்துக் கொண்டு தலைமாடு கால்மாடாக மாற்றிக் கண்ணயர்ந்தருளினான். அப்பெருமாளுக்கு "சொன்னவண்ணம் செய்த பெருமாள்" எனும் பெயர் பெற்றார். அரசன் பாகவதர்களுடைய பெருமையை உணர்ந்து அடியார்க்கு அடியவராகவே வாழ்ந்து வந்தான்.

**இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும்தெய்வம்*
இனியறிந்தேன் எம்பெருமான்! உன்னை *இனியறிந்தேன்
காரணன்நீ கற்றவை நீ கற்பவை நீ *நற்கிரிசை
நாரணன்நீ நன்கறிந்தேன் நான்.

திருமழிசை ஆழ்வார் நான்முகன் திருவந்தாதி – 96.

## இவ்வாறாக

# முன்னம் ஒருநாள்......






❀❀நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே! ❀கொடித் தோன்றும் தோரண
வாயில் காப்பானே! ❀மணிக்கதவம் தாள் திறவாய்
ஆயர் சிறுமியரோமுக்கு ❀ அறை பறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்❀
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்❀
வாயால் முன்னமுன்னம் மாற்றாதே அம்மா! ❀ நீ
நேய நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்.

– திருப்பாவை 16.



வகிடுமறைத்து விசாலநெற்றி தெரியும் கிரீடம். கருமையாய் அடர்ந்துவளைந்த நெரித்த புருவம். விடைத்த நாசியின்கீழ் மெலிதாய் இழையோடும் புன்னகை நிறைந்த இதழ்கோடியில் தெரியும் இருதெற்றிப் பல்லின் அழகு. உருண்ட கன்னங்களின் இருபுறமும் தோள்தொட நீண்டகுண்டலம் சுமக்கும் செவிகள். அகன்ற மார்பும் ஒடுங்கிய இடையும் இடையில் சுற்றிய வெண்பட்டும் வலக்கரமொரு சுட்டுவிரல் நீட்டி வலதுபாதம் ஊன்றி நிற்கும் இடது முழங்கால் கடந்து இடதுகரத்தில் ஊன்றிய கதைமேல் வைத்து நிற்கும் லாவண்யம். வெள்ளி முழியில் உருளும் கருவிழி கண்கள் காட்டும் ஒருவழிப்பாதை! ஒரேதடவைதான்! துணைவரும் துவாரபாலகர்......சன்னதியை விட்டு வெளியில் வரும்போதுதான்,‘‘இவரிடம் சொல்லாமல் உள்ளே வந்தோமோ”?! மனதிற்குள் கூவல் கேட்டதும்; திரும்பி அவரைப் பார்த்தால், “எப்பொழுதும் என்னிடம் கேட்டுக் கொண்டா உள்ளே போகின்றாய்!’’ என்று சொல்லும் சிங்கப்பல் தெரிய ஒரு சின்னச்சிரிப்பு! “ஆனந்தம் ஐயா! உன்னால்தான் இத்தனை நாளும் தரிசனம் கிடைத்த தகுதிக்கு நான் தாளாமல் தடுமாறுகின்றேன் என்பதை தெரிந்தேன் இன்று! நீங்கள் நினைத்தால் தினமும் திருக்கோயிலுக்கு வரச்செய்யாமலும் வைத்திருக்கலாமே?”

விஷ்ணுசித்தர் பொற்கிழி பெற்று பரந்தாமனுக்கு பல்லாண்டு பாடிய திவ்ய க்ஷேத்ரம். மதுரை கூடலழகர் பெருமாள் திருக்கோவிலில் நிகழ்ந்தது.

தைவீ ஸம்பத் விமோக்ஷாய
நிபந்தாஸுரி மதா
மாஸுச ஸம்பதம்
தைவீம்பிஜா தோஸி பாண்டவ

தெய்வ சம்பத்து மோட்சத்தை அடைய உதவும். அஸுர சம்பத்து சம்சார பந்தத்தினை அளிக்கும். பாண்டவனே! வருந்தாதே! நீ தெய்வ சம்பத்துடனே பிறந்திருக்கின்றாய்! – கீதை: 16:5.

இனிய கீதம் போன்றும், மலர்கள் போலவே மென்மையும், வண்ணமும், வாசமும் உள்ள சொற்களை நாவினில் சொல்லும்போதே உற்ற துணையாக வரும் வாக்கியங்கள் உன்னத செல்வத்திற்கு ஒப்பானவை.

தெய்வம் தருகின்ற செல்வங்கள் நமது வாழ்வின் நிகழ்வுகளில் கீர்த்தியும், பூர்த்தியும் (புகழும், நிறைவும்) தரும். செல்வங்கள் இருந்தும் நிம்மதியாக வாழமுடியாமல் ஒவ்வொரு செயலிலும் வருத்தமும் மனக்குறையும் இருக்குமானால் அது அபராதச் செல்வம் என்று தெரிந்து கொள்ளலாம்.

அருட் செல்வமாயிருந்தால் உதவாத வழியில் போகாது. செலவுகள் எல்லாமே அழியாத மறு சுழற்சியாய் பெற்ற மக்களுக்கு ஆகும்.

ஸ்ரீ கிருஷ்ண பக்தனாவது முதலில் வறுமையும் வெறுமையும் தனியாக சந்திக்க நேரிடும் என்று பயப்படுகின்றமாதிரி காட்டி தங்களின் கஷ்டங்களுக்கு ஆறுதல் தேடிக் கொள்கின்றது கண்மூடித்தனம். தூய பக்தன் தனது தற்காலிக உலகின் வளம், வறுமை கண்டு மயங்கவுமில்லை தயங்கவுமில்லை என்பதால், ஜடச் செல்வத்தை இழக்கின்றான். அது அந்த பக்தன் தனது பௌதிக ஐஸ்வர்யத்தின் மீது அவன் செலுத்திய அலட்சியம். அதற்கு கிருஷ்ணரோ அல்லது அந்த பக்தனது கர்மாவோ கிடையாது. துறவு சிறந்ததுதான் என்பது நமது குறை அறிவினால் விபரீதமாகப் புரிந்து கொள்ளக் கூடாது. கீதையில் ஸ்ரீகிருஷ்ணன் செயலாற்றத் தூண்டினாரே தவிர செயலைத் துறக்கச் சொல்லவில்லை.

“நான் செயலாற்றி அடைய வேண்டியது எனக்கெதுவுமில்லை. இருப்பினும் செயல் படுகின்றேன். என்னை முன்னுதாரணமாகக் கொண்டு யாரும் செயலற்ற நிலையை ஏற்கக் கூடாது. செயலாற்றவில்லையென்றால் உடலைக் கூட நடத்திக் கொள்ள முடியாதல்லவா” என்று கீதையில் கேட்டிருக்க மாட்டார்.

கர்ணனும் பாரதப் போரில் அர்ஜுனன்முன் எதிர்த்து நிற்கின்ற ஒருநாள், அன்று கர்ணனின் தேர் சக்கரம் மண்ணில் புதைந்து கொண்டது. அவனது தேரோட்டி அவனது துரதிர்ஷ்டம்! கர்ணனை அந்த சமயத்தில் விட்டுவிட்டுச் சென்று விடுகின்றான். கர்ணன் தன் தேரின் சக்கரத்தை புதையுண்ட இடத்திலிருந்து தூக்கிக் கொண்டிருக்கும்போது, அர்ஜுனனின் தேரோட்டியாக இருக்கின்ற பகவான் “இதுதான் சமயம்! கர்ணனைத் தாக்கி நீ வெற்றிக்கு வலிமை சேர்” என்கின்றார்.

கர்ணன் பகவானைப் பார்த்து,“எனது தேரோட்டி என்னை விட்டுவிட்டுச் சென்று விட்டான். நான் என் இரதத்தை தூக்கி நிறுத்தும் வேலையிலிருக்கின்றேன். ஆயுதமேந்த இயலாத நிலையிலிருக்கும்போது நீ என்னைத் தாக்கத் தூண்டுவது தர்மமல்ல”.

ஸ்ரீகிருஷ்ணர் புன்னகையுடன், “அபிமன்யு சிறுவன். மகாரதர்கள் எல்லோரும் சூழ்ந்திருக்க அபலையாய் அவனிருக்கும் போது வதைத் தாயே! அப்பொழுது ‘தர்மம்’ நீ கடைப்பிடிக்க வில்லை. இப்பொழுது அதன்பின்னால் உன்னால் ஒளிந்து கொள்ள முடியாது.” என்றார்.

ஆதாயினமாயாந்தம் ஹன்யாதேவா விசாரயன்
நாததாயிவதே தோஷோ ஹந்துர் பவதி கஸ்சன
- மனுஸ்மிருதி-8,350-351.

பாதகர்களை விசாரணையின்றிக் கொல்ல வேண்டும். அவர்களைக் கொல்பவர்களுக்கு தோஷம் ஏதுமில்லை.

“ உன் உயிருக்கு ஆபத்து என்கிற பயத்தில் இப்பொழுது எனக்கு தர்மத்தை உபதேசிக்கின்றாய். சுயநலமிகளால் தர்மம் கையாளப்படமுடியாது.” என்ற கிருஷ்ணர், அர்ஜுனனின் பக்கம் கையசைத்து ஆணையிடுகின்றார். காண்டீபம் கனைகளை விடுக்க, கர்ணனின் ஆன்மா கண்ணனின் கழலினைச் சேர்கின்றது. தர்ம தேவதை தலை நிமிர்கின்றாள்.

தர்மம் நம்மை காக்கவும், ஆளவும் வேண்டும் என்று நாம் விரும்பினால் ஹரி நாமமே கதி. தர்மம் வெல்லும்! நாம் வாழ்வோம். தர்மம் மனதின் வசப்பட்டது தான். அதனால் தான் மனசாட்சிப்படி நடந்து கொள்ள பெரியவர்கள் வழிகாட்டினார்கள். இன்று யாருக்கும் மனசாட்சி இல்லை என்று விதண்டாவாதம் செய்யும்போது தன் மனதை ஒருமுறை உற்றுப்பார்த்தால் நம் மனசாட்சி நமக்குச் சொல்லும். நானிருக்கின்

றேன் என்று, தன்னுள் இருப்பதை ஒருவன் உணர்ந்தால் ஏன் தன்னைப் போன்ற உயிர்களிடம் அத்தனையும் இருக்கும் என்பது தெரியாமலா போய்விடும்.

ஒரு வயதான தாய் அவர்கள் என்னிடம் தன் கதி என்னவாகும் என்று வருந்தி பிள்ளைகளைச் சொல்லி பெருமைப்பட்டுக் கொள்வார். அந்த அம்மா மதுரை கூடலழகர் சுந்தர ராஜ பெருமாளிடம் மிகுந்த பக்தியுள்ளவர். இரண்டு மகள்களும், மூன்றாவதாக ஒரு பையனும். மூவரையும் நல்ல நிலையில் எம்பெருமான் வாழவைத்துவிட்டார். நான் தான் என்ன கதியாவேன் என்று பயத்துடன் இருக்கின்றேன் என்பார். ஒரு பெண்மணிக்கு வாழ்வு எப்படி இருக்கனுமோ அப்படித்தான் இருக்கின்றது. அவர் துணைவரான அந்த ஐயாவும் என்னுடன் தன் பிள்ளைகளைப்போல் பழகுவார்.

அந்த அம்மாவிடம் எனக்குத் தெரிந்த பகவானின் வைபவங்களைச் சொல்லுவேன். படித்ததும் கேட்டதும் தான். பெரியவர்களிடம் என்னைக் காட்டிக் கொள்ளும் பெருமை. அவர்களும் என்னைச் சின்னப்பையன்தானே என்று நினைக்காமல் தாராளமாகப் பேசுவார்கள். அன்று வைகுண்ட ஏகாதசி. இருவரும் கூடலழகர் கோலாகலத்தில் இருக்கின்றோம். வைஷ்ணவர்கள் கூட்டம். கோஷ்டிகானம் ஆனந்தமாயிருக்கும் வேளையில் அம்மா என்னிடம்,

“இன்றே இப்பொழுதே எனக்கு உறுதி ஒன்று சொல்லேன்” என்றார்கள்.

“உங்களின் தகுதிக்கு முன்னால் நான் யாரம்மா?” “உங்கள் வீட்டு வேலைக்காரியின் பேரன் நான். என்னைப் பெற்றவர்களால் நானும்; அவர்களை பெற்றோர்களாக அடைந்த என்னால் அவர்களும் துரதிர்ஷ்டத்தைத் துரத்தவில்லை. வைஷ்ணவர்களின் அன்புக்கு ஆளாக இயலவில்லை. உங்களுக்கென்ன என் தாயே! இதைச் செய் என்று சொல்லுங்கள். வேண்டுகோளெல்லாம் வேண்டாம்” என்றேன்.

‘‘இப்படியெல்லாம் யோசிக்க உன்னால்தான் முடியும். என் அஸ்தியை கங்கையில் கரைக்க வேண்டும் என்கின்ற ஆசையை என் வீட்டார்கள் யாரும் ஒத்துக் கொள்ள மாட்டார்கள். அவர்களுக்கு தெய்வ வழிபாடுகள் விழாக்கள் எல்லாம் வெறும் கேளிக்கையும் சடங்குகளும் தான்! நானே போய் என் அஸ்தியைக் கரைக்க முடியுமா சொல்! அவர்களுக்கு நம்பிக்கையை வளர்த்து எப்படியாவது நீ தான் நிறைவேற்றனும். அவர்கள் பிள்ளைகள் பாடு நம்மால் என்ன முடியும் என்று நீ உன் வசத்தில் போய்விடுவாய்! உன் நிலை உண்மையில் எதிர்காலத்தில் இப்படி பகவான் விசயத்தில் அலட்சியமாய் இராது என்னை நம்பு!”

நீங்களெல்லாம் வாசிக்கும் இந்த சூழலில் அந்த அம்மாவின் பிள்ளைகள் அக்காமார்கள் இருவரும் அண்ணனும் கூட எனது ‘நாரதர்’ இதழை வாங்கிப் படித்தார்களானால் கங்கையை எங்கள் கண்கள் காணும்.

பிதாஸி லோகாஸ்ய சராசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யஸ்ச குருர்கரீயாந்
நத்வத்ஸ மோஸ்த்யப்பதிக: குதோந்யோ
லோகத்ரயேப்யப்ரதிமப்ரபாவ
– கீதை: 11:43

“இம்முழுப்பிரபஞ்சத் தோற்றத்தின் தந்தையும், வந்தனைக்குரிய தலைவரும், ஆன்மிக ஆசிரியரும் நீரே. உமக்குச் சமமானவர் யாருமில்லை. இந்த மூவுலகங்களுக்குள்ளே நீர் அளவிட இயலாதவர்.”

தன்னலமற்ற, எல்லா உயிர்களையும் நேசிக்கின்ற, அந்த உயிர்கள் வாழும் உடல்களின் குணச் செயல்களை உதாசீனம் செய்கின்ற ஒருவர் தனது பிராண வல்லபனாக பகவானை ஏற்றுக்கொண்டு; மனம், வாக்கு, தேகம்,புலன்,புத்தி எல்லாவற்றுக்கும் பகவானை பற்றிக் கொள்ளச் சொல்லித் தந்து வாழவைக்கும் ஒருவனால் வணங்கப்படுகின்ற சிறப்புமிக்க தெய்வம் ஸ்ரீகிருஷ்ணன். அவனையும் வசீகரிக்கும் ஆற்றல் யாரிடம் நிறைவாகக் காணப்படுகின்றனவோ அதே குணம் கொண்ட ஒருவரால்தான் அவரைக் கண்டறிய இயலும். எங்கும் நிறைந்த பிரம்மத்தை அவ்வாறு அழைக்கத் துணிவு இல்லாதவனானாலும் பரமனையே தகப்பனாக ஏற்கின்ற ஒருவரை அவனையே தனது குருவாகவும் கருதியவர் வேண்டிப் பெறக்கூடியது ஒன்றும் இல்லை.

கங்கையில் தன் சரீரச் சாம்பல் கரைந்தால் நிச்சயம் மறு உடல் தேடி அலைகின்ற வேலையிருக்காது. அந்த நம்பிக்கை என்னிடமிருக்கும் என்று நம்புகின்றது தான் பக்தி.

‘பகவான்’ அங்க அடையாளங்களின் மீது கருத்தூன்றி சிலாகிப்பதும், பூஜை புனஸ்காரங்களால் வழிபட்டு பலன்களை ஆவலுடன் எதிர்பார்த்து மகிழ்வதுமான எண்ணங்கள் நம்பிக்கை என்று ஏற்க முடியாது. ஜீவன் ஒன்றேயானாலும் இளம் உடலில் யோசிப்பதும், முதிர் உடலில் யோசிப்பதுமான தொரு வினயங்களுக்குள் வித்தியாசம் நிறையவே இருக்கின்றது. தன் வாழ்வு முடியும் தறுவாய் ஒருவருக்கு உடல்விடும் நினைவு வந்தால் எப்படி யோசிப்பார் என்பதை கவனித்தேன்.

முதிர்ச்சியினால் முதிர்ந்த மாம்பழநிற நெற்றியில் இரு முல்லையரும்பென சின்னஞ் சிறிய பாதம் தாங்க நெற்றி வகிடுவரை நெடுக வரைந்த செந்தூரத் திருமண். மஞ்சள் பொடியில் மங்கிய கரும்புருவங்களின் காவலின் கீழ் கழிவிரக்கத்தினால் நீர்தளும்பும் கண்கள். நான் கவனித்துவிட்டேன் என்றதும் முந்தானையில் முகம் மறைத்து கண்களை ஒற்றியெடுத்தார். பச்சைநிற மென்மையான நூல்புடவை. சிவப்பு பார்டரில் சண்டிச் சரிகை.

எங்கள் கண்கள் தளும்பும் ஈரம்.

நான் கவனத்தை மாற்றினேன். பாசுரம் பாடத் தூண்டினேன்.

(திருமழிசைப்பிரான் அருளிச் செய்த திருச்சந்தவிருத்தம். 40 வது பாசுரம்.)
அம்மாதான் பாடுகின்றார்.

ஆனைக்காத்தொரானைகொன்று அதன்றி, ஆயர்பிள்ளையாய்*
ஆனைமேய்த்தியாநெயுண்டி அன்று குன்றமொன்றினால்*
ஆனைகாத்து, மையரிக்கண் மாதரர்திறத்து *முன்
ஆனையன்று சென்றடர்த்த மாயமென்னமாயமே?

முந்தானையில் முகம் துடைத்துக் கொண்டதும் அமைதியாய் இருந்தார்.

ஒரு பெண்மணி சின்னப்பையனிடம் இப்படிப் பேசிக் கொண்டோமே என்று கூச்சம் அடைந்திருப்பார்களோ!

வயது பற்றிய சிந்தனை மறந்து, ஆண் பெண் என்கின்ற வேறுபாடுதான் தலைதூக்குமோ!

வேலைக்காரியின் பேரனிடம் இப்படி விண்ணப்பித்திருக்கத் தேவையில்லையே என்ற எண்ணம் வந்திருக்கலாமோ?

எத்தனையோ யோசனை எனக்கும். அத்தனையும் என் மதியீனம். அந்த அம்மாவின் கண்களின் பக்தியுணர்வு என்னைத் திணறச் செய்தது. என்னிடம் இறைவனுக்கு இவ்வளவு இரக்கமா. பக்தர்கள் தங்களை இப்படி என்னிடம் கேட்டுக் கொள்வார்களா!

ஆனை வந்தது. இந்த யானைக்கு என்ன தெரியும்! பாவம். அதன் தலையில் வரைந்திருப்பது திருமண்ணா, திருநீறா, வடகலையா தென்கலையா ஏதாவது தெரியுமா என்று நாகரீகம் இல்லாமல் பேசியிருக்கின்றேன்.

கண்களில் ஈரம்! அவ்வளவு கண்ணீரா! யானையின் கண்களிலிருந்தும் வழிந்து கொண்டிருக்கின்றது. ‘பாகன்’ என் பெயர் சொல்லி அழைத்தார்.

முழங்காலைத் தூக்கி தும்பிக்கையை நான் பிடித்துக் கொள்ள வாகாய் நீட்டியது யானை. ஒரு கையால் தும்பிக்கையில் ஊன்றி அதன் கால்மீது கால்வைத்து வலது கையால் யானையின் காதைப்பிடித்து ஏறி உட்கார்ந்து கொண்டேன். நாங்கள் முன்னால் செல்ல (நானும் யானையும்) கூடவே பாகன் வழிநடத்திச் செல்கின்றார். யானையின் பெயர் ‘சுந்தர்ராஜன்’ அவன் மக்கள் தரும் பழங்களை வாயில்போட்டுக் கொள்வான். காசுகளை என்னிடம் தருவான். சிறு பிள்ளைகளை பாகனிடம் தருவார்கள். அவர் வாங்கி என்னிடம் தருவார். நான் வாங்கி மடியில் உட்கார வைத்துக் கொண்டு; யானை நாலடி நடந்து நின்றதும் குழந்தையைக் கொடுப்பேன்.

நான் குழந்தையாய் இருந்த பொழுது என்னை யானையில் யாரும் ஏற்றி அழகு பார்த்திருப்பார்களா? இப்பொழுது கூட கேட்க நாதியில்லை. இந்த லட்சணத்தில் யானை சவாரியா?

பின்னால் வந்த பெருமாள் மேல ரத வீதியில் எங்களைக் கடந்து முன்னால் செல்கின்றார். இனி இந்த வீதியில் பிள்ளைகள் சவாரியும் பணமும் வராது. பாகன் என்னைக் கீழே வரச் செய்து கொண்டார். சுந்தர்ராஜன் தும்பிக்கையை என்தோளில் போட்டுக் கொண்டான்.

எனக்கு அம்மா பாடிய திருச்சந்த விருத்தத்தின் உரையை நினைக்க யோசனை வந்தது. ஆனையைக் காத்து ஒரு ஆணையைக் கொன்று என்ற பாசுரம் கூறுவது...

கம்சனின் மதுராவைக் கைப்பற்ற குவலயபீட மதயானையை அலட்சியமாகக் கொன்ற ஸ்ரீகிருஷ்ணன், தன்னை ஆதிமூலமே என்றழைத்து அவனைத் தவிர வேறு யாராலும் காப்பாற்றப்படக் கூடாது என்று விரும்பிய பிடிவாதக்கார கஜேந்திரனை என்ன வேகத்தில் காப்பாற்றினான். எத்தனை பெரிய மலையை வாரம் முழுவதும் சுமந்திருந்து; தான் மேய்த்த ஆவினங்களையும், அவைகளால் உண்டிருந்து உயிர்வாழும் ஆயர்களையும் அவர்கள் குடும்பங்களையும் காப்பாற்றினான். கோகுலத்தில் வசிக்கின்ற மாதரசிகள் அனைவரும் கண்ணனைக் கண்களின் ஒளியாய் காணும் ஆற்றல் பெற்றவர்கள். அவர்களிடம் மாயம் செய்யமாட்டேன் என்று என்னதான் சொன்னாலும் உனது மாயமென்ன மாயமோ! அனைவரிடமும் அவர்களால் நீ காப்பற்றப்படும் பிள்ளையாய் காட்டிக் கொள்கின்றாய். அவர்கள் அப்படித்தான் நம்புகின்றார்கள். உன் நலம் வேண்டுவதே அவர்கள் உயிர்மூச்சு. உன்னால் தாங்கள் தான் காப்பாற்றப்படுகின்றோம் என்பதை அவர்கள் அறியாமலா கிருஷ்ணா "எங்களைக் காப்பாற்று என்று அபயம் கேட்கின்றார்கள்!

திருச்சந்த விருத்தம் தெள்ளிய நீரோடை சலசலக்கும் அழகில் என் அறிவில் எட்டச் செய்த அந்த அம்மாவுக்கு நான் ஒரு பதிலும் சொல்லவில்லை என்று அவர்களும் வருந்தவில்லை. திவ்யபிரபந்தம் சாதிப்பதும், கோஷ்டி கானமும், வைகறை வரை வைபவம் நெஞ்சம் நிறைத்ததும் பொழுது புலர்ந்தது. நான் வைகைக்குச் சென்றுவிட்டேன். பொழுது போனதே தெரியவில்லை. இளம் வெயில் சுள்ளென்று வெளுத்து வாங்க ஆரம்பித்ததும் மீனாட்சியம்மனிடம் வந்து விட்டேன். அந்நேரம் கூட்டமில்லை. சொக்கநாதர் சன்னதியில் குருக்கள் வேலை சொன்னார். அவர் வீட்டு வேலைகளை முடித்து மீண்டும் கூடலழகர் கோவிலுக்கு வரும் பொழுது நண்பகல் நடை சாத்தியிருக்க சுந்தர்ராஜன் மட்டும் தென்னைக் கீற்றுகளை உரித்து மடித்து வெற்றிலை போடுகின்ற மனிதன் மாதிரி வாயில் திணித்துக் கொண்டிருந்தான். பாகன் சாப்பிட ஆயத்தமானவர் என் வருகையில் மனம் விரும்பி சாப்பிட அழைத்தார்.

"ஏலே! சாப்பிடுதியா! அந்நா அந்த எலைய எடுத்துப் போட்டு உக்காரு" விரதம் இருக்கியாலே! இல்லேல்லா.....

" உங்க கூட உக்காந்து தின்னாலும் விரதம் எனக்கு உண்டு. எவ்வளவு பெரிய ஜீவனுக்கு வயித்துக்கு போடுறீங்க. உங்ககிட்ட போய் பட்டினிய விரதம்ன்னு சொன்னா, சுந்தர்ராஜன் கோவிச்சுக்கப் போறாரு" வயிராறச் சாப்பிட்டுவிட்டு யானை காலருகில் படுத்துக் கொண்டால்.....அது இத்தனூண்டு கண்ணில் என்னைத்தான் பார்த்துக் கொண்டிருக்கின்றது. இத்தனை பெரிய விலங்கு ஏன் மனிதனுக்கு அடங்கிப் போகிறது. வீட்டில் நேற்று முன் தினத்திலிருந்து இன்னும் ஒருவரும் என்னைத் தேடவில்லை.

எனக்கு விபரம் தெரிந்ததிலிருந்து என்னை வேண்டும் என்று விரும்பியவர்கள் வேறு யாராகவாவது இருப்பார்கள். என்னுடையவர்கள் என்று நான் நம்புகின்றவர்கள் இல்லை. இந்த ஊரில் மீனாட்சி சொக்கநாதர், கூடலழகர் பெருமாள், வைகை நதி, கோரிப்பாளையம் முதல் சுப்பிரமணியபுரம் வரை நினைத்துப் பார்த்தால் இன்னும் நிறைய...எதனினாலும் ஒரு பக்தனாக நான் வாழ்வை அமைத்துக் கொள்வேன் என்றோ இறைவனைப் பற்றி பேசியும், எழுதியும்தான் வாழ்வேன் என்றோ அதனால் ஒரு கவளச் சோறாவது கிடைக்கும் என்றும் கூட நான் எதிர் பார்க்கவில்லை.

யாசித்துக் கேட்டுப் பெற்று அல்லது கடன் சொல்லி வாங்கி, உருப்படியாய் ஒரு வேலை பார்த்து என்றெல்லாம் வழக்கமாய் வாழ்நாள் நடக்கவில்லை.

யார் வீட்டிலும் தங்கினால் அவர்கள் வீட்டு நபர்களுடன் செல்லப்பிராணிபோல் ஒரு ஆள். அது நான்தான். என் அம்மாவின் தாய் தந்த வாழ்வு! அந்தத் தாய் இப்பொழுதும் எனக்கு அதே வாழ்வைத் தந்து விட்டு தள்ளி இருந்து பார்த்துக் கொள்கின்றாள் சாக விடாமல்.

"சாவு" எப்பொழுது அஸ்தி கரைக்கச் சொன்ன அந்த அம்மாவுக்கு நடந்தது என்று தெரியவில்லை. கங்கைக்கு நான் பலமுறை சென்று வந்துவிட்டேன். சில வருடங்கள் கழிந்தபின் ஒருநாள் அவரது மகள் என்னைப் பார்த்தார். என்னை அடையாளம் அவர்களுக்குத் தெரிந்து விட்டிருந்ததும்; 'அக்கா' என்று

அழைத்து அருகில் சென்றேன்.

பெரிய ஆளாகி விட்டாய்! என்ன செய்கின்றாய்?

நான் வேலை செய்யும் மாத இதழ் சொன்னேன். சிரித்தார்.

“எழுதுவது உன் விருப்பம். அதையேன் வேலையாய் எடுத்துக் கொண்டாய். இப்படி நா சொல்லக்கூடாது. நீ செழிப்பா காசு பணத்தோட இருப்பன்னு நினைச்சேன்.”

“அப்படித்தான் இருக்கேன்... அம்மா எப்படியிருக்காங்கக்கா?”

‘‘இந்த ஏகாதசிலதான்பா... நாலு நாளாகுது.”

யானை தன் தும்பிக்கையைத் தோளில் போட்டதை விட கனத்தது.

‘‘அஸ்தியென்னவாயிற்று’’ எப்படிக் கேட்பது. ‘‘உன் வாழ்வு பகவான் திருவுள்ளப்படியிருக்கும் என்னை நம்பு!” என்று அந்த அம்மா இப்பொழுதும் சொல்கின்ற மாதிரி இருந்தது. அக்கா நிறைய பேசிக் கொண்டே வந்தாள். எப்படியோ வண்டியூரில் அவர் வாங்கியிருக்கும் புதுவீட்டுக்கு அழைத்து வந்து விட்டாள். அக்கா கணவர் “ஜெயந்த் மாமா” வீட்டில்தான் இருந்தார்.

“வாப்பா...பால்பாயிண்ட் மாப்ள!

“மாமா..... இன்னும் மறக்கிலியா? என் ஞாபகம் உங்களுக்கு இப்படியா இருக்கனும்.”

“உங்கிட்ட பால் பாயிண்ட் பேனாவுல குத்து வாங்கினவன் திருப்பரங்குன்றத்தில் முருகனுக்கு வேல் குத்திக்கிட்டு விழுந்து கும்புடறவங்களுக்கு விபூதி பூசி விட்டு ஆசி சொல்லிட்டுருந்தான். பார்த்ததும் உன் ஞாபகம் தான் வந்தது.”

‘நீ எழுதுறது எல்லாம் படிப்பேன். நீயென்ன ஒருவிசயத்த சொல்றதுக்குள்ள ஒவ்வொரு செயலா போய் வந்துட்டு இருக்க? நல்லாருக்கு! எல்லாருக்கும் புரியுமா? நிறைய படிக்கிற பழக்கம் இருக்கிறவங்களுக்குப் புரியும்.

என்ன பேசாம இருக்க...!’

சொல்லுங்க மாமா... இப்ப அம்சமா இருக்கீங்க.

‘கேட்டியாடி... என் அழக; பேனாக்காரன் சொல்லுறான். அக்கா பக்கம் திரும்பியவரை மடக்கி, நான், “வாங்க மாமா காசிக்கு போய்ட்டு வருவோம்.”

‘‘முன்னம் ஒருநாள் இந்த நாளைப் போலவே! இந்த உணர்வுடன் இந்த நிகழ்வை, இதே இடத்தில் நான் சந்தித்திருக்கின்றேன்.”

இப்படி என்றாவது ஒரு நேரத்தில் நிச்சயம் சந்தித்திருப்போம். அது பழகினவிதத்தில் நன்மை என்று நாம் விரும்பி உள்ளூர மகிழ்கின்றோம்? அந்த நிகழ்வை நாம் சந்திக்கவில்லை யென்றாலும் அந்த எண்ணங்கள் பதிவான தாகையால் அது மறுபதிப்பாக நேரில் அந்த இடத்திற்கு வரும்போழுது; நினைவில் ‘இது ஏற்கனவே நான் அனுபவித்திருக்கின்றேனே என்று நம்மை நம்பச் செய்கின்றது. நினைவாலேயோ, உடற்கூறினாலேயோ தொட்டுப்பார்த்த தொடர் நிகழ்வுகள் மீண்டும் நிழலாடுகையில் முன்னமொரு நாளென்றே தோன்றும்.

“ஊனேறு செல்வத்து உடற்பிறவி யான் வேண்டேன்.”

இது குலசேகர பெருமான் வேண்டுதல்.

உடலுக்கு உற்ற செல்வம் ஆரோக்கியமான புலனிந்திரியங்கள்.

கர்மேந்திரியங்கள் துணைசெய்ய; மனம் வழிகாட்ட; ஒவ்வாத பல சிக்கல் நிறைந்த செயல்களில் உழன்று கொண்டாட விதி. முன்னம் ஓர் நாள். இப்படி எத்தனை நாட்கள்! இவ்வாறாக எப்பொழுது வேண்டுமானாலும் நினைத்து நிறையச் சொல்லிக் கொள்ளலாம்போல் இருக்கின்றது. ‘நென்னலே வாய் நேர்ந்தான்’ என்று கோதையம்மா சொல்லுகின்றாள் திருப்பாவையில்.

பகவான் அர்ஜுனனுடன் பேசும்போது ‘எனது பக்தன் என்னால் பராமரிக்கப் படுகின்றான்’ என்று முன்னம் ஒரு நாள்,

‘வாழ்வும் தருவேன் என்னை அடையும் வகையும் தருவேன்’ அறை பறை மாயன் மணிவண்ணன் நென்னலே வாய் நேர்ந்தான்

என்று முன்னம் ஓர்நாள், கோதை சொல் தமிழ்மாலை.

“கங்கையில் என் அஸ்தியைக் கரைத்துவிடு” என்று முன்னம் ஒருநாள் அந்த அம்மா சொன்னார்.

பின்னிட்ட சடையானும் பிரம்மனும் இந்திரனும்
துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள் வாசல்
மின்வட்டச் சுடராழி வேங்கடக்கோன்தானுமிழும்
பொன்வட்டில் பிடித்து உடனே புகப் பெறுவெனாவேனே.

நானொருவன் வேங்கடவன் வெற்றிலை உமிழும் பொற்குவளை பிடித்துக்கொண்டே வைகுண்டத்திற்குள் அவனுடனே போய் விடுவேன். இந்திரனும் பிரம்மனும் மகேஷ்வரனும் என்னாலானதுபோல் அவர்களுக்கு ஆகுமோ! ஆழ்வார்களின் பாசுரங்களால் நமக்கான புகலிடம் வெகு சுலபம். ‘‘துயிலெழப் பாடுவான் வாயால் முன்னம் முன்னம் மாற்றாதே!” எப்பொழுது சொன்னால் என்ன? யாரிடம் எவ்விதம் சொன்னால் என்ன? அம்மானின் சரணம் பற்ற ஒரு பிறவி. அது அவன் சம்பந்தம் உள்ளதாயிருந்தால் போதும்.

“புழுவாய் பிறக்கினும் புண்ணியா உன்னடி என் மனத்தே வழுவாதிருக்க வரம் தர வேண்டும்.”

‘உன் கோயில் திருக்குளத்து மீனாகப் பிறக்கவும், உன் சன்னதியில் படியாய்க் கிடந்தும்’

கல்லானாலும் பார்த்துக் கொள்வாய் என்னை நீயே! என்றெல்லாம் பக்திப்படிகள் பல இருக்க. பாசம் பற்று கண்டு என்ன பயம்? இந்த உடல் சொந்த பந்த பாசத்திலும் பற்றிலும் தூய்மையிருந்தால் அது பரம பாவனையாய் பகவத் பக்திக்கு வித்தாகுமே! “என் வாழ்நாளில் நீயெனக்குத் தேவையில்லை’’ என்கிற உறவுகளோடுதான் இந்த அறுபத்துநாலு வருடங்களும் வாழ்கின்றேன். பகவானிடமும் சரி, பந்தங்களுடனும் சரி எனக்குத் தேவையில்லையென்று எவருமில்லை.

என்னை வேண்டாம் என்கிற வலி எப்படியிருக்கும் என்றதில்தான் நமக்கு எல்லாமுமான உற்றவன் நம்பெருமானை வேண்டாத வாழ்வு அவருக்கு எப்படியிருக்கும். சும்மாவா பூமிக்கு வந்து வந்து விளையாடுகின்றார்?!

என்னமோ வயித்துப்பாடு! மன்னாளும் மந்திரியிலிருந்து; மாமா மகன் ஐ.ஏ.எஸ் படிக்க ஆவன செய்யும் பல திட்டங்களையும் பேசி; நான் வேலைசெய்யும் ‘ஞானபூமி’ மாத இதழ் பெருமையுடன் மக்கள் மனப்போக்கு எல்லாம் அளவளாவிவிட்டு,கடைசியில் ஒருவாய்க்குச் சோறும், அரிசியும் கேட்டுத்தான் பிழைப்பு என்று பேச்சை முடித்தாயிற்று. தெளிந்த மனதுடன் வண்டியூர் தெப்பக்குளத்துக் கரையில் வந்து உட்கார்ந்து மீண்டும் சொன்னேன். ‘‘மாமா முன்னம் ஒருநாள் அத்தையம்மா, தனது அஸ்தியைக் கங்கையில் கரைக்கச்சொன்னார். அதனால் தான் நாமளாவது காசி போய் வருவோமா என்ன? என்று கேட்டேன்”

“நான் இந்தக் கிறுக்கன்னுகிட்ட (அவர் மைத்துனன்) சொன்னேன்டா... ஒரு மகனா இருந்து அந்தம்மாவுக்கு நீ இந்த ஒரு காரியமாவது செய்டான்னு.

“உடல் பொய்னு தத்துவம் பேசுறீங்க செத்த சாம்பல ஏன் கரைக்கனும்? எதையாவது சொல்லி கும்பல் சேர்த்துக்கிட்டு கலாட்டா பண்ணனும்....ம்”

“போலீஸ் வேலைக்குப் போய்ட்டானா... மனுஷனா வாழ மறந்துட்டான்.”

“இப்படியெல்லாந்தான் நடக்கும்ன்னு முன்னமே அந்தம்மா என்கிட்ட சொல்லிருச்சு நாம போவோம் காசிக்கு.”

“அதவிடுறா... சாம்பல்தானில்லையே! ‘ஜகந்நாதபுரி’ போவோம். அத்தையம்மாவ பெருமாள் பாத்துப்பார்.”

முன்னம்முன்னம் மாற்றாதேயம்மா நீ.....
நேய நிலைக்கதவம் நீக்கேலோர்

ஆகா....ஜகந்நாத பூரிக்கா....
ஜெய் ஜகந்நாத்..!ஜெய் பலதேவ்..!ஜெய் சுபத்ரா..!

ஜெகந்நாத் புரி போவோம் அடுத்த இதழில்....



திரிலோக சஞ்சாரி
**நாரதர்**

# தமயந்தி



## கற்பனையெனும் அற்புதம்!

பெண்ணுருவம் கற்பனை! கடவுள் கற்பனை! கலையும் கற்பனை! காவியம் கற்பனை இவைகளின் ஆரம்ப இச்சையான காதலும் கற்பனை. இவைகளெல்லாம் உண்மையாகும் அற்புதம் எத்தனை ஆச்சரியம்! எத்தனை இன்பங்களும் வேதனைகளும்; மற்றும் இராச்சியங்கள் வீழ்வதும், ஆள்வதுமான வரலாற்று நிகழ்வுகள் அத்தனையும் கற்பனை. கற்பவை, கற்றுத்தருபவை கற்பனை.

உண்மையை உண்மையென்று சொல்லிவிட்டு உண்மையைத் தவிர வேறில்லை என்றால் வேறு என்னதான் இருக்க முடியும்! ஏன்! அப்படித்தான் சொல்லவேண்டுமா? பின்னால் ஒளிந்திருக்கிறது கற்பனை! அது உண்மையாகிவிடும் 'அற்புதம்' எனும் ஆற்றல் நிறைந்தது. எந்த நிகழ்வும் நடந்த பின்னும் மீண்டும் 'கற்பனை'யாகி விடும் அபாயம் உள்ளது. ஆனால் கற்பனை; நிகழ்வாகவே உண்மையாகிவிடும். நம் முன்னோர்கள் எளிதாக ஒருவார்த்தை! ''மனம் போல் மாங்கல்யம்" என்று எழுதிவிட்டார்கள். இதை என்னால் விளங்கச் செய்ய முடியாது. மதம் கொண்ட யானையை மல்லிகைச் சரத்தால் கட்டுவதும் நளன் தமயந்தி கதையைக் காட்சிப்படுத்துவதும் ஒன்றுதான். இறையருளால் வாசிப்பவர்களுக்கு தெய்வீகப் பண்பிருந்தால் கலியில் கண்கண்ட கடவுளைக் கருத்தால் அறிய உதவும் கதை!

**விக்னேஸ்வராய நம:**

ஆதித் தனிக்கோல மானான் அடியவற்காகச்
சோதித் திருத்தூணில் தோன்றினான் – வேதத்தின்
முன்னின்றான் வேழம் முதலே யெனவழைப்ப
என்னென்றான் எங்கட்கிறை.

எங்களின் இறைவன்; ஆதியிலிருந்தே தனித்தலைவனாக தன்னிகரற்றவனாக இருப்பவன். தன் பக்தர்களுக்காக கல்தூணிலும் கூடத் தோன்றியவன். பெருவிலங்கு யானையும் ஆதியே என்று பிளிறவும் என்னவென்று உடனே வந்து துணையிருந்தவன். வேதங்கள் காட்டும் முதல் தலைவன்! – புகழேந்திப்புலவர்.

இன்று நாம் காணும் தமிழகத்தில் "தொண்டை மண்டலம்" 'சான்றோரை' தோன்றச் செய்யாமல் வறண்டுதான் போயிற்று. அன்று அவ்வையம்மாள் வாழ்ந்து வாழ்த்தியிருக்கின்றாள் சான்றோர்கள் நிறைந்த பூமியென்று"

'காரார் களந்தைப் புகழேந்தி' என ''தொண்டை மண்டலசதகம்'' குறிப்பிட்டு கூறுகின்றதால் இப்புலவர் ஊர் களத்தூர். உண்மைப் பெயர் தெரியாது. மற்ற அருந்தமிழ்ப் புலவர்கள் போற்றும் புகழ்பெற்றவராக 'புகழேந்தி' என்று வழங்கிவிட்டதாக வரலாறு. நிச்சயம் விவசாயிதான். நிலமகளின் அழகைச் சொல்லும் விதத்தில் விவசாயி மட்டும் தான் இப்படி இரசிக்க முடியும்! ஐயோ கடவுளே! இப்பொழுது 'விவசாயி' என்று நம்

தலைமுறைக்கு அடையாளம் காட்டும் அவலமான கோரமான மனிதனல்ல விவசாயி.

தன் மகள்; எண்ணெயில்லாத பரட்டைத் தலையாய் அழுக்கு உடையுடன், வனப்பின்றி வாடிய முகத்துடன் வாய் பார்த்து நிற்கும் அழகுச் சிறுமியைக் காணச் சகியாமல் வாஞ்சையாய் வாரியெடுத்து வளமாக்கி அழகு பார்ப்பாளே அந்தத் தாய் போல் தன் நிலம் வானம் பார்த்த பூமியாயிருந்தாலும் கானிநிலமானாலும் தூறல் விழுந்ததும் துணைக்கு மாட்டை மட்டும் அழைத்துக் கொண்டு காலநேரம் பார்க்காமல் மண்ணைப்புரட்டி ஆறப்போட்டு அவரையோ, துவரையோ, எள்ளும், உழுந்தும், பருத்தியும் என்று எதையாவது விதைப்பான். எதுக்குமே இந்த மழை போதாது என்றால் மாட்டுக்குத் தட்டையாவது பயிரிடுவான். பூமகளை பொலிவின்றிப் பார்க்க மனம் பொறுக்காதவன். எதற்கும் வழியில்லையென்றாலும் வேப்பமுத்தும், ஆமணக்கும் சேகரித்து எண்ணெய்க்குக் கொடுத்துத் தன்னைப் பேணுவான். விளை பொருளை மட்டும் நம்பி உயிர் வளர்ப்பான் “வேளாளன்”.

நூற்றுக் கணக்கான ஏக்கர்களைக் கையகப்படுத்திக் கொண்டு கூலிக்கு ஆள்வைத்து குடைபிடித்து குரைப்பவனும் மண்ணைக்காட்டி மழையைக்காட்டி மானியத்துக்கு ஏங்கும் பிச்சைக்காரனாய் புறம்பேசித்திரியும் புலையனல்ல விவசாயி! களையைக் கண்டாலும் கவிபாடுவார் புகழேந்தி. கிறங்கிக் கரைந்துவிடும் பதரும். முளைத்து மகிழ்ந்து கதிர் விடும் பயிரும்.

ஆட்சியிலிருப்பவன் அதர்மம் ஆட்கொண்டால் அறம்பாடியே கொல்லும் வல்லமையுள்ள புலவர்களில் ‘புகழேந்தி’ புகழ் ஏந்தியிருப்பவர்தான்.

காமத்துப்பாலை மட்டும் கண்ணிழந்த ஒருவனிடம் ஓவியம்யென்று விற்றுவிட்டு ஒய்யாரமாய் சிலைவைத்து ஒருகுறளை எழுதி வைத்து ஆட்சியில் ஏறியிருக்கும் அவலட்சணத்தை அறம் பாடி அழிக்க ஆளே இல்லையா? ஆயிரம் பிள்ளைகளைப் பெற்ற பெருந்தமிழன்னை அனாதையாய் அழுகின்றாள். உரோமபுரியிலிருந்தும் கூட வந்து சீறாப்புராணம் பாடிய பெருமகனாரும் தன்பிள்ளைகளுடன் ஏற்ற தமிழ் ‘தாய்’ மீண்டும் தலைநிமிர வேண்டும். புகழேந்திப் புலவரின் தமிழ் காவியக் கதை நம் வாழ்வின் கலிதோஷம் நீங்க கலியே மனம் இரங்க வேண்டும். நம் மனப்பூர்வமான எண்ணப் பூக்களை இப்புலவருக்குக் காணிக்கை ஆக்குவோம்.

பாரார் நிடத பதிநளன்சீர் வெண்பாவால்
பேரார் புகழேந்தி பேசினான் – தாரார்
செழியனையுஞ் சென்னியையுஞ் சேர திறைகொள்
மொழியின் சுவையே முதிர்ந்து.

“கல்யாணம்”

இது ஒன்றுதான் இந்த பூமியில் அறத்தினின்று மனிதன் வழுவாதிருக்க உதவும் ஒரே ஒரு அஸ்திரம். அதைப் பிரயோகிக்கத் தெரியாமல் தனக்கே ஆபத்தானதாகச் செய்யவும் முடியும். நமக்கிருக்கும் இன்றைய வசதி வாய்ப்புக்களால் கல்யாணக் கனவுகளை அழகாகக் காணலாம். நம் தமிழ்ப் பண்பாட்டில் அத்தனை அறிவுத் தீபங்கள் ஒளியூட்டி வழிகாட்டிக் கொண்டிருக்கின்றன. தமிழனென்றால் காட்டுமிராண்டித் தனமாக காளையோடு மல்லுக் கட்டுவது என்று வீணர்களால் பேசப்படும் விதண்டா வாதத்திலிருந்து வெளிவர வேண்டும். அழகிய குணவதியால் உற்ற துணையாக வளர்க்கப்பட்ட காளை அவளது தந்தைபோல் தனயன் போல் துணையிருந்தது. அதை அன்பின் ஆற்றலில் பலம் கொண்ட மட்டும் வசப்படுத்தினால்; வளர்த்தவள் தன்னையும் தன் உயிருக்கு மேலான கற்பையும் அம்மாவீரனுக்கு வழங்கி மாலையிடுவாள். இது தமிழச்சி நன் மக்களைப் பெற அவள் தேர்ந்தெடுக்கும் ஆண் துணைக்கான தேர்வு! இன்று இனப்பெருக்கத்தில் எருதுகளை விட கேவலமாக நடந்து கொள்ளும் மனிதப்பூச்சிகளுக்கு மாடுகளுடன் என்ன போட்டி!

தமிழ் காளைகளையெல்லாம் கலப்பினத்தில் அழித்து விட்டோம். இன்றிருக்கும் எருதுகளுக்கு இனச் சேர்க்கையென்றால் என்னவென்றே தெரியாது. கண்ணியமிக்க கணவனைத் தேர்ந்தெடுக்க கன்னிப்பெண் காளையை வளர்ப்பாளா? தேவையில்லாத தேர்வு! நாலுபிள்ளைகளைக் கர்ப்பத்திலேயே கரைத்துவிட்டு ஒன்றிரண்டைப் போனால் போகிறதென்று பெற்றுப் போடுகின்றாள். அதுகள் பெண்மையைத்தான் தேடித் தேடி சீரழிக்க

தெருவில் திரிகிறதுகள். இதில் அறமெனப்பட்டதே இல்வாழ்க்கை எனும் வள்ளுவப் பெருந்தகையின்சொல் கல்லில் தானிருக்கின்றது.

"ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி" என்று நோன்பிருக்கும் தமிழ் மகள் தருவாள் நன் மகவை. அவள் காண்கின்றாள் கல்யாண கனவை. வாரணம் ஆயிரம் சூழ வலம் செய்து தெய்வீகத் திருமணம் நிகழ்வதுதான் அறம் வளர்க்கும் அன்னையாய் அவளை வாழ வைக்கும். அப்படியொரு பிள்ளையைத் தரும் தலைவனை அவள்தான் தேர்ந்தெடுக்க வேண்டும். அதற்கு அவள் 'தமிழ்' தாயின் ஆபரணங்களை அணிந்திருக்க வேண்டும்.

திருப்பாவை, திருவெம்பாவை, திவ்யபிரபந்தம், தேவாரம், திருவாசகம், திருக்குறள் என ஞான குண அணிகலன்கள் விருப்பம் போல் அணிந்து அழகு பெறலாம். தமிழன்னையின் தவப் புதல்வியாக நம் தமிழ்மகள் வாழ்ந்தால் பறையோரும் மறையோரும் பாங்குடனே வாழலாம். மீண்டும் தமிழ் தரணியாளும்.

ஆசையில்லாத அறிவு, பயமில்லாத உடல் பலம், தயக்கமில்லாத நன்னடத்தை ஆகிய சிறப்பு குணமிகுந்த 'வீமன்' நாம் 'பீமன்' என்போம். அவனது செல்வ மகள். தன் பெண்மையின் நற்பண்புகளால் தேவாதி தேவர்களையும் வசீகரித்தவள். இவளை வாழ்வின் துணையாகக் கொள்ளும் எவனும் பிறவிப் பயனடைவான் என்று அனைவரும் நம்பினர். யாரும் யாரையும் விரும்பலாம். உண்மை அன்பு உற்ற துணையாக எப்பொழுதும் கூட வரும். 'அன்பின் வழியது உயிர்நிலை'. என்மகள் என்தாயாகவோ மகளாகவோ வரத்தான் பிறவிகள். பகை கூடத் தொடர்கின்றதென்றால் பாசம் தொடராமலா போய்விடும்? தன்மகள் தமயந்திக்கு தக்க பருவத்தில் சுயம்வரம் நிகழ்த்த ஆயத்தமானான்.

ஆதியில் தேவர்களையும், கந்தர்வர்கள், இராச்சசர்கள் போன்ற வெவ்வேறு உலகத்தவர்களையெல்லாம் தெரிந்தும் உணர்ந்தும் உறவுடன் தான் வாழ்ந்திருந்தோம். இன்னும் கொஞ்ச காலத்திற்கு முன்பு அமெரிக்கர்கள், ஜப்பானியர்கள், ரஷ்யர்கள், சீனர்கள், ஆப்பிரிக்கர்கள் என்ற வகையில் தெளிந்திருந்தோம். இன்று அண்ணன், தம்பி, மாமா, சித்தி என்கிற வகைகள் கூட தனது வாரிசுகளில் அறிமுகமாவது குறைந்து வருகின்றது உடன்பிறப்புகள் இல்லாத போது மாமா, சித்தி, அத்தைகளுக்கு எங்கே போவது. தாய்மாமன் மான்பு தெரியாதவள் மானங்கெட்ட மனிதனை எப்படி அடையாளம் தெரிந்து கொள்வாள்.பெண்மையைப் பேணாத சமூகம் வாழாது.

''நீதி தேவதை கண்களை கட்டிக் கொண்டிருப்பது பாரபட்சமில்லாமல் நீதி வழங்க". இது தாய்மையே தெரியாத தற்குறி ஆங்கிலேயன் கண்டுபிடிப்பு. நமது பாரதத்தாய், நீதிமான்களின் கண்களில் காணும் அன்பும் கருணையும் கள்வனையும் கண்கலங்க வைக்கும். வாயில்லாப் பசுவுக்கும் நீதியாக தன் செல்வ மகனைப் பலியாக்கிய நீதிமான்கள் நம் மூதாதையர்கள். இப்பேர்ப்பட்ட முன்னோர் களைக் கொண்டது நமது பாரதம்; ஆங்காங்கே குறுநில மன்னர்கள் ஆட்சியிருந்தது. அவர்களுக்கெல்லாம் பேரரசர்களும் சக்ர வர்த்திகளும் இருந்து வாழும் வகை தந்து துணையிருந்தார்கள். தர்மம் தவறினால் தன்னையே மாய்த்துக் கொள்வார்கள்.

தருமமாவது கருமமாவது என்வீட்டைப் பார்த்தால் போதும் என்றிருந்த நிலையும் போய் என்னைமட்டும் பார்த்துக் கொண்டால் போதும் என்கிற சுயநலத்தை நோக்கி போகவிடாமல் அவசரமாய் தடுக்க ஒரே வழி!

திருக்கோயில்கள் அறநிலையத்துறை என்கிற விலங்கிலிருந்து விடுபட வேண்டும். அறிவூட்டும் தெய்வீகக் காவியங்கள் கற்றுத் தரும் பாட சாலைகள் அந்தந்தக் கோயில்களில் அமைக்க வேண்டும். என்னால் முடியாது. "அறம் செய விரும்பு" என்பதால் விரும்புகின்றேன். உலகெலாம் சைவ நெறி ஓங்க வேண்டும் என்று தினமும் சிவன் கோயில்களில் சிவத் தொண்டர்கள் பாடுகின்றார்கள். ஒருவர் வாக்காவது பலித்திருந்தால் கிருமிக்கு கோயில்களைப் பூட்டியிருப்போமா? நமக்கே கோயில் கைங்கர்யம் வெறும் பிழைப்பாகிவிட்டால் மன்னன்தான் முறையாய் ஆட்சி செய்வானா? மழைதான் நம்மை வாழவைக்கப் பெய்யுமா?

எல்லாம் சரியாயிருந்த காலம் மன்னராட்சிதான். மக்களில் ஒருவன் தான் ஆட்சியைப் பிடித்தான்.

"பயிர்கள் பதர்களை வளரவிட்டுவிடும். பதர்கள் பயிர்களை வளரவிடாது" அப்படித்தான்

ஆட்சிக்கு வந்த மக்களாட்சி மன்னன் தன் வாரிசு மட்டுமே வரும்படி உட்கார்ந்து கொள்கின்றான். இதுவா மக்களாட்சி!

நாட்டை தனதென்று தருமனும் சூதில் இழந்தான். நயமாய் கைப்பற்றிய துரியோதனன் இராஜ்யத்தில் இருந்து தன் பங்காளிகளைத் தான் விரட்டினான். இறைவனிடமும் மக்களிடமும் தனது பக்கம் நின்று போர்புரிய வேண்டினான். ஆண்டவனும் ஆட்களைத் தந்து உதவினான். தான் வெறும் சேவகனாய் ஆயுதமில்லாமல் எதிரணியில் இருந்து கொண்டான். சூதில் தருமன் இழந்த ராஜ்யத்தை மீண்டும் அவனுக்கே பெற்றுத் தருகின்றான். தருமன் நாடிழந்து காட்டிற்குச் சென்று வாழ்ந்ததற்கும் ஒரு காரணம் இருக்கின்றது. பாண்டவர்கள் வனத்திற்கு வந்திருக்கின்றனர் என்றவுடன் 'அக்னி' தேவனே தான் யக்ஞ நெய் உண்டு திணறுவதால் மூலிகைகள் செழித்திருக்கும் காண்டவ வனம் எனக்கு நீ உண்ணத் தருவாயாக" என்று கேட்டு வந்துவிட்டான். தேவர்களால் பாதுகாக்கப்படும் மூலிகைவனம் காண்டவம் அர்ஜுனனின் அக்னி அஸ்திரத்தினால் இரையானதும் இறைவனின் திட்டம். இதன்மூலம் இந்திரனுக்கும் பாண்டவர்களுக்கும் மனஸ்தாபம் காண்டா வனந்தீ....

நாட்டின் கண் வாழ்வைத் துறந்துபோய் நான் மறையோ
ரீட்டங்கள் சூழ இருந்தானைக் – காட்டில்
பெருந்தகையைக் கண்டார்கள் பேரெழிற்றோள் வேந்தர்
வருந்தகைய ரெல்லோரும் வந்து.
காண்டா வனந்தீக் கடவுளுணக் கைக்கணையால்
நீண்ட முகில் தடுத்து நின்றாற்கு – மீண்டமரர்
தாளிரண்டு நோவத் தனித்தனியே யோடிய நாள்
தோளிரண்டு மன்றோ துணை.

பேரரசும் பெருஞ்செல்வங்களும் கைவிட்டு பாண்டவர்கள் கானகம் வந்து வசிக்கத் தலைப்பட்டது இதற்குத்தான். அறைகூவலை ஏற்பதும் அடைக்கலமானவனை காப்பதும் சத்ரிய தர்மம். இந்திரன் தனது மழைமேகங்களை அனுப்பியிருந்தும் அவைகளை நீராய்ப் பொழிய விடாமல் சரத்தால் கூடம் அமைத்து அக்னி தேவன் வேண்டிக் கொண்டபடி காண்டவ வனத்தை தின்று தீர்க்கச் செய்தான். இந்திரனின் துணையாக போருக்கு வந்த அமரர்கள் (தேவர்கள்) அர்ஜுனனின் சரமழைக்குப் பயந்து ஓடினார்கள். சமூகத்தில் என்ன மாற்றம் நிகழவேண்டுமோ அதற்கேற்ற வகையில் ஆள்வோரின் வாழ்வும் மாறுகின்றது. எல்லாம் மக்களின் அறநெறி வாழ்வைப் பொறுத்ததாக அமைகின்றது. நல்லவர்கள், அறநெறி தவறிய பொல்லவர்கள் இவர்களின் வாழ்வு மட்டுமே போருக்கும் அமைதிக்கும் அடிப்படை காரணம்.

கேடில் விழுச்செல்வங் கேடெய்து சூதாடல்
ஏடவிழ்தார் மன்னர்க் கியல்பேகாண் –வாடிக்
கலங்கலை நீயென்றுரைத்தான் காமருவு நாடற்
கிலங்கலை நூன்மார்ப னெடுத்து.

கேடில்லாத நல்லபயனைத் தரும் வகையில் செல்வம் செலவாகி விளைந்தும் வரவேண்டும். அதுவே மன்னர்களின் இயல்பு. நல்ல மன்னன் சூதில் வெல்லமாட்டான்.

நளனும் சூதாட அழைக்கப்பட்டான். அவனது முன்னோர்களான பாண்டவர்களுக்கு நேர்ந்த கதி அவனுக்கும், அறைகூவலை ஏற்க வேண்டிய அவலநிலை!

சீத மதிக்குடைக் கீழ்ச் செம்மையறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் தனிக்காத்தான் – மாதர்
அருகூட்டும் பைங்கிளியும் அடற்பருந்தும்
ஒருகூட்டில் வாழவுலகு.

பகைஉணர்வு கொண்ட இரு பறவைகள் கிளியும் பருந்தும். இவைகள் அதனதன் பாங்கில் அங்கேயே சேர்ந்து வசிக்குமாம். குளிர்ந்த முழு நிலவின் வெண்ணொளி முகில்கள் மிளிரக் கடந்து வந்து நிலம் தழுவும் இரவு. அன்பும் அறமும் ஆலிங்கனம் கொண்டு உறங்கும் மக்கள். பாதம் தாங்கும் பசும் புல்லும் , வானோங்கி வளர்ந்தே விருட்சங்களும் பெரும்புயலையும் பூந்தென்றலாக்கும் வளம் நிறைந்த காடு நிறைந்த நாடு. தெருக்கள் தோரணங்கள் அணிந்த மாடங்கள் 'நிடத' நாட்டின் வளம் பற்றி தன் பேடைகளிடம் பேசும் அன்னங்கள். புகழேந்திப் புலவர் 'மகாபாரதத்தில்' வியாசர் சொல்லும் நளன் தமயந்தி கதையை மிகைப்படுத்தாமல் பாக்களாய்ப் பகர்கின்றார்.

நளனது நாட்டின் இயற்கை வளம் மக்களின் ஒழுக்கம் நிறைந்த மனோபாவத்திற்கு சாட்சி. சூதாட்டத்தில் தங்களை மன்னன் இழந்து விட்டான் எனும் போதும் அவர்கள் அன்பில் குறைவில்லாமல் நளனது வீரத்தன்மையை மெச்சினர். தங்கள் மன்னன் மீண்டும் அறியனை ஏறுவான். அதுவரை காத்திருப்போம். நம்மை வாழவைக்கும் இறையருள் நளனையே

ஆளவைக்கட்டும் என்றெண்ணி வாளா விருந்தனர்.

பிள்ளைகளும், பட்சிகளும், பசுக்களும் செழிப்பாக இன்பமாய் வளர்ந்தனர். யானைகளை வேலைகளுக்குப் பயன்படுத்திக் கொண்டனர் விவசாயிகள். நகர மங்கையர்கள் மங்கலச் சின்னமாக அணியும் பொன் ஆபரணங்களும், பூசிக்கொள்ளும் சந்தன மஞ்சள் குழம்புகளும் வீதியெங்கும் சிந்திக் கிடப்பதால் யானைகள் வழுக்கும் என்று மெதுவாக நடந்து செல்லும். மக்களின் கலைநயம் ஞானம் நிறைந்திருக்கும்.

கோதை மடவார்தங் கொங்கை மிசைத்திமிர்ந்த
சீத களபச் செழுஞ்சேற்றால் – வீதிவாய்
மானக் கரிவழுக்கும் மாவிந்த மென்றுளதோர்
ஞானக் கலைவாழ் நகர்.

விண்ணுலகவாசிகளும் வாழ வர விரும்பும் ‘நிடதநாடு’. நளன் ஆட்சியில் மேலும் மெருகேறிற்று. அலுத்துக் கொள்ள இயலாத ஆனந்தம்; தெய்வீகச்சூழல்.

பொய்கை நிறைய பூங்குவளைகள். சுள்ளென்ற ஒளிவெள்ளம். சுடாதசூரியன். சோலையில் பாடும் பறவைகள். கலித்தொகை, நற்றினை, திருமுருகாற்றுப்படை இவைகளில் வருணித்துக் கூறப்பட்டுள்ள அணிவகைகளும் மலரினங்களும் வனம் நிறைந்திருக்க உச்சிக் கால பூசையினை முடித்துக் கொண்ட நளன்

தேனாடி வண்டு சிறகுலர்த்தும் நீர்நாடன்
பூநாடிச் சோலை புக.

உதய காலத்திற்கு முன்பே உறக்கத்திலிருந்து விழித்து எழுந்து காலைக் கடன்களை முடித்துக் கொண்டு உழைப்பின் உறுதியில் உடலையும் உள்ளத்தையும் வைத்திருக்கும் ஒருவனுக்குத் தான் நண்பகலின் இனிமையை இதமாய் அனுபவித்து உணர இயலும்.

பறவையினங்களில் தெய்வலோகப் பறவை வெள்ளை அன்னம். ஏகதேசமாக எப்பொழுதாவது பூமிக்கு வந்து விளையாடிச் செல்லும். உத்தம கல்விமான்களில் மாமன்னன் நளனும் ஒருவன். உயிர்களின் குரல் மொழி கற்றிருந்தவன். நளன் இருக்கும் சோலையில் குமரிகளும் சிறுவர் சிறுமியர்களும் பொய்கையில் விளையாடிக் கொண்டு இருக்கும் வேளையில் இவ்வெள்ளன்னம் வந்திறங்கிற்று. விளையாட்டாய் அதைப் பிடித்து மன்னன் நளனின் முன்பாக விடவும்; அந்த தெய்வீகப்பறவை மகிழ்வுடன் சிறகு விரித்து உதறி; நளனது எழில் கொஞ்சும் முகமும், சுருள் சுருளான கேசமும் மின்னும் பொற்குண்டலமும் அழகிய கழுத்தும் அணிகலனும் குறும்பு பார்வையும் குமிழ் சிரிப்பும் பரந்த மார்பும் வீரம் வலிமை சுமக்கும் தோள்களும் கண்டு, “உன் தோளுக்கேற்ற குணவதி தமயந்தியென்றோர் ‘யுவதி’ தேவர்களும் விரும்பும் தமயந்தி, உன்காதலுக்கேற்ற களங்கமற்ற கன்னி இளவரசி. பீமன்மகள் தான்”. என்று சொல்லிப் பறந்து சென்று விட்டது. அன்னம் பாராட்டும் அற்புத சுந்தரி. பீமராஜன் மகள். என் காதலுக்கு ஏற்றவள் என்று இயம்பிற்றே! நான் எங்கே காதல் கொண்டேன்! என்றெண்ணி யெண்ணியே காதல் பிறந்தது.

காதலென்றால் ஒருவருக்கொருவர் இரங்குவதல்ல. பயன்படுத்திக் கொள்ள பங்கம் வருமோ என்றஞ்சி இரங்குவது அபத்தம். தன் இணையானவர் தன்னைப்போல் அச்சம் இல்லாமை, உறுதியான நிலைப்பாடு, என்னிலையிலும் இறுக்கமாகா இதம்; யாவரும் போற்றும் நற்பேறு இவைகளெல்லாம் இருவருடனும் சமமாக இருந்தால் வரும் “அன்பு” காதல். நம் பெற்றோர்களின் காதல் உள்ளம் கண்ட அன்பு தான் நமக்கும்.

இளம் மனது புலன்களால் தூண்டப்பட்டு அறிவைத் துணைக்கழைத்துக் கொள்ளும். அறிவின் பின்னால் புலனுகர்வு தொடர்ந்தால் மனம் உண்மையை உரைக்காது. உண்மைகளை மறைக்கும் மனம் நமக்கு நண்பனாகாமல் எதிரியாகிவிடும். ஆசையும், பயமும் வாழ்வின் நிகழ்வுகளை நிகழ்த்தும். பாவம்! தள்ளாத காலம்.

அதுவே நம்பிக்கையும், தைரியமும் கொண்டு நாமாக வாழ்வை நகர்த்தினால் வாழத் தெரிந்தவர்கள் நாம் தான். செல்வந்தனாவதும், புகழ் பெறுவதுமே வாழ்வின் வெற்றியென்று அளவுகோல் வைத்து மதிப்பிடுவது மதியீனம்.

வைராக்கியமும் நிம்மதியும் வெற்றிக்கான அளவுகோல் எனக் கொண்டு அளந்ததில் தெரியும் உண்மை அளவு!

நளனது துயரம் தமயந்தியின் நலம் விரும்பினதால்; தமயந்தி பட்ட கவலையெல்லாம் நளனது வீரம், பிரகாசிக்க வேண்டுவது.

நவகோள்களின் ஆதிக்கம்தான் மண்ணுலகில் உயிர்களின், ரசம். அதன்படியே சிந்தையும் செயலும். நல்ல தண்ணீரில் நீராடியும் பருகியும் வாழ வாழ்வுக்கான சரீரம் கிடைத்த ஜீவன்களுக்கு நவகோள் மகிழ்ந்து நன்மையளித்திடும். நல்லெழில் பெறுவர். 'பால்' பருகி வாயாடி வருவதும், 'நொதி நீர்' (ஆல்கஹால் அல்லது சாராயம்) அருந்தி வாயாடுவதும் ஒரே தன்மையல்ல! சனிக்கோளின் ஆதிக்கத்தால் நளனும் தமயந்தியும் துன்புற; சூதாட்டத்தின் மூலம் சூழ்ச்சியாக 'புஷ்கரன்' நாட்டைப் பறித்தாலும் இவர்களின் காதல் எவ்விதத்திலும் பங்கப்படவில்லை.

தொல்லைக்காளாகாத தெய்வீக உலகங்களில் வாழும் தேவர்களும் துயரம் மிகுந்த இம்மானிட உலகின் பெண் தமயந்தியிடம் மையல் கொண்டனர். உயர் கிரஹங்களில் வாழும் உன்னத ஜீவர்கள் அனைவரும் இங்கே அலையும் மனிதர்களிடம் அன்பும் இரக்கமும் காட்டத்தான் செய்வார்கள். தமயந்தியின் விஷயம் வேறு. அவளை தனதாக்கிக் கொள்ளவே ஆசைப்பட்டார்கள். அதை செயலில் நடத்த முன் வந்தவர்கள் இந்திரன், யமன், அக்னி, வருணன் ஆகிய நால்வருமாவார்கள். இவர்களுக்கு என்னவந்தது? தமயந்தியைச் சொந்தம் கொண்டாட?

இதுவா 'காதல்'! தேவாதி தேவர்களுக்குமா தெரியவில்லை. அதுதான் காதல். தேவலோகத்திலுள்ளவர்களுக்கும் தெரியாது.

புத்தியின் பின்னால் புலன்களை மேயவிட்டு; மிருக (ம்ருத்யு) வாழ்வில் உழலும் மானிடர்களுக்கு எப்படித் தெரியும்?! 'மரணம்' எனும் ம்ருத்யு தேவனும் அல்லவா தமயந்தியின் 'ஸ்வயம்வரம்' நாடி வந்திருக்கின்றான். அவள் நளனைப் பார்த்ததேயில்லை. ஆயினும் அன்னம் உரைத்தபடி மனதில் அவனுருவை வரைந்திருந்தாள். ஆதலால் தேவர்கள் இந்திரனும், வருணனும், அக்னியும், எமனும் நளனுருவையே வடிவெடுத்தார்கள். அவனிடம் சென்று ''நீ வாயில் காப்போனாக நிற்க வேண்டும். ஸ்வயம்வர மண்டபத்திற்குள் வரக் கூடாது". என்றார்கள். மன்னன் மறுகினான். மறுக்கவில்லை. என் திருமணத்தில் இவர்களுக்கேனிந்த விளையாட்டு. தமயந்தியின் காதலை அறிவுறுத்தக் கடவுளர்களின் பரீட்சை என்று நினைத்தான். நகைத்தான்.

மாமன்னர்கள் கூட்டத்தில் மண்டபம் நிரம்பி வழிகின்றது. தங்கள் மன்னன் மணாளனாகத் தேர்ந்தெடுக்கப்படுவான் என்று அந்தந்த நாட்டு மந்திரிகளும், சேவகர்களும் ஆர்வமுடன் அலைமோதிக் கொண்டிருக்கின்றனர். தமயந்தியை தங்கள் மஹாராணியாக அழைத்துச் செல்ல மும்மரமாக இருந்தனர்.

தமயந்தியின் தந்தை வீமனும் ஆர்ப்பரிக்கும் விருந்தினர்கள் விருந்தோம்பலில் குறையேதும் இன்றிக் கவனமுடன் விழாவை ஏற்பாடு செய்திருந்தான். நகரமெங்கும் விழாக் கோலம். பகைவர்களும் கூட பழித்துப் பேசக் கூசினார்கள். அவர்களையும் வரவேற்று உபசரித்து மகிழ்ந்தனர் வீமனது விதர்ப்பநாட்டு மக்கள்.

வாடாத மலர் மாலையை வீமன் மகளின் கையில் தருகின்றான். "எங்கள் குல மகளே! பரந்தாமனால் பாதுகாக்கப்படும் நம் பாரம்பரியமே வணங்கும் வாழ்வைத் தரும் தகுந்த துணையைக் கண்டறிவாயாக!" என ஆசி கூறினான்!. பெண்ணிற்கு தன்னையறிந்தவன் தன் தகப்பன் என்கின்றதில் திருப்தி இருந்தால் மட்டும் தான் அவள் கணவனையும் அவனது சுற்றங்களையும், அவள் பெற்றுக்கொள்ளும் மக்களையும் மாதாவாக இருந்து வழிநடத்தும் ஆற்றல் வரும். 'தந்தை தவறிய பெண்ணால் தன் வாழ்வைத் தக்கவைத்துக் கொள்ள முடியாது. பீமனின் ஆசியால் அவனது மகள் மணாளனை கண்டறிந்தாள். சுயம்வரத்திற்கு வந்தமர்ந்த மன்னர்கள் வரிசையில் தோற்றத்தில் ஒரே மாதிரியாக நால்வர் இருக்கின்றனர். கண்கள் இமைக்கவில்லை. கால்கள் பூமியில் பாவவில்லை. வனப்பான வடிவம்தான். மானிடத் தன்மையில்லை. அன்னம் வாயுரைத்த படியென்றால் இவர்கள்; நளனேதான் என் நாயகன் என்று தீர்மானித்துவிட்டார்கள். அவன் வேடமேற்க தேவர்களும் திட்டமிட்டிருப்பதால் நான் நிடத நாட்டரசன் நளனைத்தான் மணப்பேன் என்று எல்லோரும் நம்புகின்றதால்தானே!

காதலைத் தொடர்வோம்.........



திரிலோக சஞ்சாரி
**நாரதர்**